3084

# உள்ளுறை.

| எண். | பெயர். | | பக்கம். |
|---|---|---|---|
| 1. | முகவுரை | ... ... | 1 |
| 2. | மதிப்புரை | ... ... | 4 |
| 3. | முன்னுரை | ... ... | 6 |
| 4. | பாணர் வரலாறு | ... ... | 9 |
| 5. | தமிழ் இசை | ... ... | 19 |
| 6. | திருநீலகண்ட யாழ்ப்பாணர் | ... | 32 |
| 7. | ,, ஆராய்ச்சிக் குறிப்பு | ... | 44 |
| 8. | திருப்பாணாழ்வார் | ... ... | 53 |
| 9. | ,, ஆராய்ச்சிக் குறிப்பு | ... | 63 |
| 10. | பாணபத்திரர் | ... ... | 70 |
| 11. | ,, ஆராய்ச்சிக் குறிப்பு | ... | 104 |
| 12. | குறிப்புரை | ... ... | 111 |



3084

திருக்கோவலூராதீனம்,

திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் மடாலயத்தின்

அதிபர்களாகிய

## உயர்திரு. சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாச்சாரியவடிகள் அருளிய

# முகவுரை



நூல் நூற்றல் மகளிர்க்கியல்பு. மகன் நூற்பினும் அம்மகனையும் சேயிழையாக உருவகிப்பர் புலவர்.

எம்மொழியும் செய்யுள், உரை நடை இவ்விரண்டினையும் உடையதாயிருத்தலே அம்மொழி வளர்தற்குக் கருவியாம்.

நம் செந்தமிழில் பண்டைக்காலத்தில் உரை நடை அருகியிருந்தது. உரை நடை பெருகவேண்டும் என்பது இக் காலத்துப் பேரறிஞர் கொள்கை. பல வெளிவருகின்றன. பொருள் முரண்பாடு, இலக்கண அமைதியின்மை, மரபுவழு ஆம் இவை முதலியன் மலிந்து கிடக்கின்றன. இக் குற்றங்கட் காளாகாதவை மிகச் சிலவே. "பொருள் முரண்பாடு முதலியன இல்லா உரை நடை நூல் பல வெளிவரல் வேண்டும்; தமிழ் வளரல் வேண்டும்" என எண்ணியிருந்தேமுக்குப் பாண்பெரியார் மூவர் எனும் நூலைப் பார்த்துப் படித்து மகிழும் வேளை வந்தது. பாண்

பெரியார் மூவர் எனும் நூலில் மிகு ஆராய்ச்சியுடன் கூடிய பாணர் வரலாறு எனும் பகுதியும், தமிழிசை எனும் பகுதியும் முன்னர்க் காணப்படுகின்றன. பாணர் வரலாறு நூற்குப் பாயிரம் போன்று இன்றி யமையாத தொன்றாகக் காணப்படுகின்றது. எக் காலத்தும் தமிழிசை உணரவேண்டுவதாயினும் இக் காலத்தில் மிகமிக இன்றியமையாதது.

மூவர் வரலாறும் முறையிற்றிரியாது மிளிர்கின் றது. சமயக் கொள்கைகள் மாறுபாடின்றிக் காணப் படுகின்றன. தமிழ்ச் சுவை ததும்புகின்றது. தமிழ் அறிவை வளர்க்கும் நன்னடையில் விளங்குகின்றது. ஒவ்வொரு வரலாற்றினீற்றிலும் உள்ள ஆராய்ச்சிக் குறிப்பு அவ்வரலாற்றினின்றும் அறிய வேண்டுவன வற்றை விளக்குகின்றது. தமிழ்ச்சுவையை யூட்டும் அரிய பாடல்கள் இடை யிடையே காணப்படுகின் றன. வேறு நூல்களினின்றும் தந்துள மேற்கோள் கள் மிகப் பொருத்தமுடையன. காட்டிய சாத்திரக் குறிப்பு கழிபேருவகையைத் தருகின்றது.

இங்ஙனம் மேம்பட்ட **பாண்பெரியார் மூவர்** எனும் நூலை நூற்றோர் தமிழுலகு நன்கறிந்த நாவலர் திரு. பண்டித ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள் புதல்வியார் திரு. சிவ. பார்வதி அம்மையாவார். அன்றியும் வித்துவான் திரு. சிவப்பிரகாசச்சேதிராயர் அவர்கள் மனைவாழ்க்கைத் துணையுமாவார். இங்ங னம் பிறந்த இடத்தானும் புகுந்த இடத்தானும் செங்

தமிழுரிமை உடைத்தாயிருத்தலோடு, தாமும் வித்து வான் பரீக்ஷையிற்றேறி மிகுந்த உரிமையுமுடையார். நன் கலமா மக்கட்பேறுடைமைபோலவே சீகாளத்திப் புராணவுரை முதலாம் மக்கட்பேறு முடையார். இவர் பன்னாள் கடவுளன்புடனும் மகிழ்ச்சியுடனும் வாழ்ந்து தமிழை வளர்த்துப் புண்ணியமும் புகழு மெய்துக. கல்லூரி மாணக்கர் கற்றுப் பயனுறும் செந்தமிழில் நன்கு வரையப்பெற்ற இந்நூல் நிலவுக. தமிழறிஞருலகம் போற்றுக.

இங்ஙனம்,

**ஞானியார் மடாலயம்,**

**திருப்பாதிரிப்புலியூர்.**

அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியராகிய

பல்கலைப் புலவர்

## உயர்திரு. கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் M. A., M. L, அளித்த மதிப்புரை.



உயர்திரு நாவலர் பண்டித ந. மு வேங்கடசாமி நாட்டார் அருமைப் புதல்வி தி. பார்வதியம்மை எழுதிய "பாண்பெரியார் மூவர்" என்னும் உரைநடை நூலைப் படித்து மகிழ்ந்தேன் அந் நூலுக்குத் தோற்றுவாயாகக் கூறப்பட்ட 'பாணர் வரலாறு' பாணரைப்பற்றிப் பேசும் பண்டை இலக்கியக் கருத்துக்கள் அனைத்தையும் தொகுத்துரைப்பதுடன், வள்ளுவர், விறலியர் முதலிய பழங்குடி யினங்களைப்பற்றி அரிய ஆராய்ச்சிகளைத் தன்னகத்துக் கொண்டிலங்குகின்றது. 'தமிழ் இசை' என்னும் பகுதியுள் பண்கள், இசைக்கருவிகள், யாழ் வரலாறு, ஏழிசை வரலாறு, பண்டைத் தமிழ் நாட்டு இசைப் பெருக்கம் முதலியன நுட்பமாக ஆராய்ந்து விளக்கப்பட்டுள்ளன. பாண் பெரியார் மூவரின் வரலாறும் வளமிக்க செந்தமிழ் நடையில் எழுதப்பட்டிருப்பதுடன், ஒவ்வொரு சரிதத்திலும் ஆராயத்தக்கவற்றைத் தெள்ளிதின் வகுத்து விளக்கும் ஆராய்ச்சிக் குறிப்பும் இணைக்கப் பட்டுளது. இந்நூல் கற்கும் மாணவர்க்குப் பன்னூல்

3084



அறிவும், பிழையற்ற செந்தமிழ்ப் பயிற்சியும் கைவரு மாதலின் கலாசாலைகளில் இது பாடமாக வைத்தற்குச் சிறந்த புத்தகங்களில் ஒன்றாகும். இது தமிழ் வாணர்க்கு அரிய நல் விருந்தாதலின் இதன் ஆசிரியைக்குத் தமிழுலகம் மிகவும் கடமைப்பட்டுளது.

அண்ணாமலைநகர்,
7—10—'41.

இங்ஙனம்,
**கா. சுப்பிரமணிய பிள்ளை.**

# மு ன் னு ரை

*“பூதங்க ளல்ல பொறியல்ல வேறு புலனல்ல வுள்ள மதியின்*
*பேதங்க ளல்ல இவையன்றி நின்ற பிறிதல்ல வென்று பெருநூல்*
*வேதங் கிடந்து தடுமாறும் வஞ்ச வெளியென்ப கூடல் மறுகிற்*
*பாதங்கள் நோவ வளையிந்த னாதி பகர்வாரை ஆயு மவரே.”*

*—பரஞ்சோதி முனிவர்.*

தமிழ் நாட்டிலே தமது புலமையாலும், இனிய குணத்தாலும், தமிழ்ப் பணியாற்றுந் திறத்தாலும் தமிழ் மக்கள் பலருடைய அன்பிற்கும் பாராட்டிற்கும் உரியராகிய என் அருமைத் தந்தையாரது கட்டளைப்படி, சிறியேன் சில யாண்டின் முன் வித்துவான் தேர்வினை முடித்த பின்னர், சிலநூல்கட்கு உரை யியற்றுதலையும், உரைநடைநூல் சில எழுதுதலையும் மேற்கொண்டேன். அவற்றுள் ஒன்றே ‘**பாண்பெரியார் மூவர்**’ என்னும் இவ்வுரைநடைநூல். இதனை எழுதுமாறு பணித்து, இன்னின்னவாறு எழுதுக வென என் தந்தையார் தெரிவித்த முறைப்படி இஃது எழுதப்பெற்றது

எத்துணையும் சிறிய கல்வியும் சுருங்கிய அறிவுமுடைய யான் குடும்ப வினைகட்குச் செலவிட்டு

3084



எஞ்சிய சிறிது சிறிது பொழுதுகளில் எழுதியவற்றுள் ஒன்ருய இதன்கண் எத்தனையோ குறைகள் இருத்தல் கூடும். எனினும், நிறைந்த கல்வியும் பரந்த உள்ளமுமுடைய சான்ருேர்கள் அக் குறைகளைப் பொருட்படுத்தாது இதனை ஆதரித்து, இத்தகைய தமிழ்ப்பணியில் எனக்கு ஊக்க முண்டாக்குவார்கள் என நம்புகின்றேன்.

இதனைப் பார்வையிட்டு அருள் கூர்ந்து முகவுரை யளித்த தவஞானச் செல்வராகிய பெரியார் திருவடிகட்கும், மதிப்புரை வழங்கிய கல்விச் செல்வராகிய பெரியார்க்கும் முறையே என் வணக்கத்தைச் செலுத்துகின்றேன்.

என் தந்தையாரின் அருமை நண்பரும், உயரிய குண நலங்களுடையவரும், பொருட்செல்வமும் அருட் செல்வமும் ஒருங்கு வாய்ந்தவருமாகிய கோயமுத்தூரைச் ச்ார்ந்த உப்பிலிபாளையத்தில் இருக்கும் திருவாளர் **R. V. இலட்சுமைய நாயுடு** அவர்கள் யான் இந்நூல் எழுதியதைக் கேள்வியுற்று, இதனை வெளியிடுதற்கு வேண்டும் பொருள் முழுதும் தந்து உதவினர். இப்பெருந்தகையார்க்கு மேன்மேலும் பல்வகைச் செல்வங்களும், நீடிய நல் வாழ்வும் உண்டாக எல்லாம் வல்ல இறைவன் திருவருளைச் சிந்திக்கின்றேன்.

*ஒன்றுக்கும் பற்ருத என்னையும் இம் முயற்சி யிற் புகுத்தி நிறைவேற்றி யருளும் திருவருளின் பெருமையை யானோ வழுத்த வல்லேன்!*

**சிவ. பார்வதியம்மை.**



# பாண்பெரியார் மூவர்.

## பாணர் வரலாறு.

பாணர் என்பார் தமிழ் நாட்டின் பழங்குடிகளுள் ஓர் குடியினராவர். ஆயர், குறவர், எயினர், உழவர், நுளையர் என்னும் திணை மக்களின் குடிகளும், பாணர், பறையர், துடியர், கடம்பர், வள்ளுவர், பழையர் முதலாயினோர் குடிகளும் தமிழ்த்தொல் குடிகளாம். மூதின் முல்லை யென்னும் துறையமைந்த புறநானூற்றுச் செய்யுள் (334) ஒன்றில் பூ நான்கும், உணவு நான்கும் கூறியபின்,

> "துடியன் பாணன் பறையன் கடம்பனென்
> றிந்நான் கல்லது குடியு மில்லை."

எனப் பழங்குடி நான்கு கூறப்பட்டுள்ளன. துடி முழக்குதலின் துடியன் என்பதும், பண் பாடுதலின் பாணன் என்பதும், பறை அறைதலின் பறையன் என்பதும் பெயர்களாயின. முருகவேட்குரிய கடம்பினை வழிபட்டமையால் கடம்பன் என்னும் பெயர் உளதாயிற்றுப் போலும்? இவற்றுட் பாண் குடியும்,

வள்ளுவக் குடியும் முறையே ஔவைப் பிராட்டியை யும் தெய்வப்புலவரையும் அளித்துத் தமிழகத்தைக் கடமைப் படுத்தியுள்ளன. மணிமேகலைக் காப்பியத் தில் 'முரசு கடிப்பிகூஉ முதுகுடிப் பிறந்தோன்' என வள்ளுவன் கூறப்படுகின்றான். பெருங்கதை யென்ற பழங் காப்பியத்திலே தமிழ் வழக்கை யொட்டி, வள்ளுவரைப் பற்றிய செய்திகள் பலவிடத்துக் கூறப் பட்டுள்ளன.

"அரசு கொற்றத் தருங்கடம் பூண்ட
முரசெறி வள்ளுவ முதியனைத் தரீஇ.'

என்றும்,

"திருநாள் படைநாள் கடிநாள் எனறிப்
பெருநாட் கல்லது பிறநாட் கறையாச்
செல்வச் சேனை வள்ளுவ முதுமகன்."

என்றும் அதிற் கூறப்படுதல் காண்க. மன்னர் பிறந்த நாள், படையெழுச்சி நாள், மணநாள் என்னும் இப் பெரு நாட்களிலேயே அச்செய்திகளை வள்ளுவர் முர சறைந்து தெரிவிப்பரென்று கூறியிருப்பது, பொது வாகப் பறையறையும் ஏனையோரின் இவருக்குள்ள வேறுபாட்டையும், இவர் தம் மதிப்பையும் நன்கு புலப்படுத்துகின்றது. இன்னோர் அரச காரியங்களை நகர மாந்தர்க்கு அறிவித்தல் முதலிய கருமத் தலைமை யுடையராயினமையானே

"வள்ளுவன் சாக்கை யெனும்பெயர் மன்னர்க்
குள்படு கருமத் தலைவற் கொன்றும்."

எனத் திவாகர, பிங்கல நிகண்டுகள் கூறுவனவாயின.

மற்றும், அவர் அரச ராணையை அறிவிக்குமிடத்து நகர வீதிகளில் தானைகள் சூழ யானைமீ திவர்ந்து சென்று முரசறைந்து தெரிவிப்பரென்பதும், இக்குடியினர் பண்டுதொட்டுக் குறி (சோதிட) நூலில் வல்லுநராக இருந்து வருகின்றன ரென்பதும், வேறு சில செய்திகளும் அறியப்படுகின்றன.

இனி, பாண் குடியின் தொன்மையை மிக்க பழமை வாய்ந்ததாகிய தொல்காப்பியத்திலே பாணர் கூறப்படுதல் கொண்டு அறியலாகும். பாண் குடியின் ஆண் மக்கட்குரிய பெயர்கள்,

> "சென்னியர் வயிரியர் செயிரியர் மதங்கர்
> இன்னிசை காரர் பாண ரென்ப."

என்னும் பிங்கல நூற் பாவானும், பெண் மக்கட்குரிய பெயர்கள்,

> "பாடினி விறலி பாட்டி மதங்கி
> பாடன் மகடூஉ பாண்மக ளாகும்."

என்னும் திவாகர நூற்பாவானும் அறியப்படும். இவற்றுள் விறலி என்பது விறல்பட ஆடுபவள் என்னும் பொருளது. இப்பெயர் பாடினிக்கே யன்றி, வேறு குடியின் மகளிர் சிலர்க்கும் உரியதாகும். ஆசிரியர் தொல்காப்பியனார் "தாவினல்லிசை" என்னுஞ் சூத்திரத்து, ஆற்றுப்படைக்கு இலக்கணம் கூறுமிடத்து, ஆடவருள், கூத்தர், பாணர், பொருநர் என்னும் மூவரைக் கூறியவர், மகளிருள் விறலி யென்னும்

பெயரை மட்டும் குறிப்பிட்டுள்ளார். அச் சூத்திர வுரையிற் கூத்தர் முதலாயினுரைக் குறித்து, 'கூத்த ராயிற் பாரசவரும் வேளாளரும் பிறரும் அவ் வாடற் ருெழிற்கு உரியோரும் பாரதி விருத்தியும் விலக்கியற்கூத்தும் கானகக் கூத்தும் கழாய்க் கூத் தும் ஆடுபவராகச் சாதி வரையறை யில ராகலின் அவரை முன் வைத்தார்; பாணரும் பொருநரும் தத்தம் சாதியில் திரியாது வருதலிற் சேர வைத்தார்; முற்கூறிய முப்பாலோருட் கூத்தராயினுர் எண் வகைச் சுவையும் மனத்தின்கட்பட்ட குறிப்புக்களும் புறத்துப் போந்து புலப்பட ஆடுவார்; அது விறலாக லின் அவ்விறல்பட ஆடுவாளை விறலி யென்ருர்; இவ ளுக்கும் சாதிவரையறை யின்மையிற் பின் வைத்தார். பாணரும் இசைப்பாணரும், யாழ்ப்பாணரும், மண்டைப் பாணருமெனப் பலராம். பொருநரும் ஏர்க்களம் பாடுநரும், போர்க்களம் பாடுநரும், பரணி பாடுநருமெனப் பலராம். விறலிக்கு அன்னதோர் தொழில் வேறுபா டின்றித் தொழிலொன்ருகலின் விறலியென ஒருமையாற் கூறினுர்' என நச்சினுர்க் கினியர் உரைத்திருப்பது ஈண்டு அறியற்பாலது.

மற்றும்,

"தோழி தாயே பார்ப்பான் பாங்கன்
பாணன் பாடினி யிளையர் விருந்தினர்
கூத்தர் விறலிய ரறிவர் கண்டோர்
யாத்த சிறப்பின் வாயில்க ளென்ப."

என்னும் கற்பியற் சூத்திரத்தில் பாடினியும் விறலிய

ரும் வேறுவேறு கூறப்பட்டிருத்தலும் விறலியர் யாவ ரும் பாண்மகளிரல்ல ரென்பதனைப் புலப்படுத்தும்.

இனி, புறத்திணையியல் உரையில் நச்சினார்க் கினியர் காட்டிய பாணர் வகையுள் 'இசைப்பாணர்' என்பார் கண்டத்தாற் பாடுகின்றவர் ஆவர். இன் னோர் பாடற்பாணர் எனவும், அம்பணவர் எனவும், அகவலர் எனவும் வழங்கப்படுவர். யாழ்ப்பாணர் என்பார் யாழினைக் கருவியாகக்கொண்டு இசை பாடி வாழ்ந்து வருவோராவர். இவர்களது இசைக் கருவி யாகிய யாழ் சீறியாழெனவும், பேரியாழெனவும் இரண்டு வகைப்படும்.

> "பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பின்
> இன்குரற் சீறியா ழிடவயிற் றழீஇ
> நைவளம் பழுநிய நயந்தெரி பாலை
> கைவல் பாண்மகன் கடனறிந் தியக்க."

எனச் சிறுபாணாற்றுப் படையிலும்,

"இடனுடைப் பேரியாழ் முறையுளிக் கழிப்பி" எனப் பெரும்பாணாற்றுப் படையிலும் வருதல் காண்க. சீறியாழ் ஏழு நரம்புகளையுடையது; இது செங் கோட்டியாழ் எனவும் படும். பேரியாழ் இருபத் தொரு நரம்புகளையுடையது; இது பரவையாழ் என வும், பெருங்கலம் எனவும் வழங்கப்படும். இவற்றை உடைமையான் யாழ்ப்பாணர் சிறுபாணர் எனவும் பெரும்பாணர் எனவும் இரு வகைப்படுவரெனக்

கருதலும் அமையும். இவர்கள் யாழையேயன்றிக் குழலையுங் கருவியாகக் கொண்டு இசை பாடுவர் என்பது,

> "குழலினும் யாழினும் குரன்முத லேழும்
> வழுவின் றிசைத்து வழித்திறங் காட்டும்
> அரும்பெறன் மரபிற் பெரும்பா ணிருக்கையும்"

என்னுஞ் சிலப்பதிகார அடிகளால் அறியப்படும். மண்டைப்பாணர் என்பார் பிச்சை யேற்கும் 'மண்டை' என்னுங் கலத்தினைக் கையிற் கொண்டோர் ஆவர். "பாணர் மண்டை நிறையப் பெய்ம்மார்" எனவும், "அருந்தலை யிரும்பாணர், அகன் மண்டைத் துளையுரீஇ" எனவும், "ஏலாது கவிழ்ந்த வென் இரவன் மண்டை" எனவும் புறப்பாட்டுக்களில் வருதல் காண்க.

இனி, பாணர்கள் தூண்டில் முதலிய கொண்டு மீன் பிடிக்கும் வழக்கமும், பாண் மகளிர் மீனினைக் கொண்டு போய் விற்று நெல் முதலிய கூலப் பொருள்களை வாங்கி வரும் வழக்கமும் உடையர் என்பதனை,

> "பச்சூன் பெய்த சுவல்பிணி பைந்தோற்
> கோள்வல் பாண்மகன் றலைவலித் தியாத்த
> நெடுங்கழைத் தூண்டி னடுங்க நாண்கொளீஇக்
> கொடுவா யிரும்பின் மடிதலை புலம்பப்
> பொதியிரை கதுவிய போழ்வாய் வாளை"

எனப் பெரும்பாணாற்றுப் படையிலும்,

"அஞ்சி லோதி யசைநடைப் பாண்மகள்
சின்மீன் சொரிந்து பன்னெற் பெறூஉம்
யாண ரூர" (49)

எனவும்,

"முள்ளெயிற்றுப் பாண்மக ளின்கெடிறு சொரிந்த
அகன்பெரு வட்டி நிறைய மனையோள்
அரிகாற் பெரும்பயறு நிறைக்கு மூர." (47)

எனவும் ஐங்குறு நூற்றிலும் வருதல் கொண்டு அறிய லாகும். பாணர்கள் புலையர் இனத்தவராகவே கரு தப்பட்டனரென்பது,

"புதுவன வீகை வளப்பாடிக் காலிற்
பிரியாக் கவிகைப் புலையன்றன் யாழின்"

எனக் கலித்தொகையினும்,

"வைகொண்ட வூசிகொற் சேரியின் விற்றெம்மில்
வண்ணவண்ணப்
பொய்கொண்டு நிற்கலுற் றோபுலை யாத்தின்னி
போந்ததுவே"

எனத் திருக்கோவையாரினும் வருதலால் அறியப் படும். தமிழ் நாட்டிலே ஆரியர் கலப்புடன் நாற் குலப் பாகுபாடு ஏற்பட்டபின் பழந்தமிழ்க் குடியினர் இவ்வாறு தாழ்ந்தவராக ஒதுக்கி வைக்கப்பட்டாரா தல் வேண்டும். "தென்னிந்திய சாதி வகுப்பு வர லாறு" (Castes and Tribes of Southern India)

என்னும் நூலில், மலையாள நாட்டிலே இவர்கள் திரு வரங்கப் பாணன், மீன் பிடிக்கும் பாணன், குடை கட்டிப் பாணன், புள்ளுவன் என நான்கு பிரிவின ராக உள்ளனர் என்றும், கூத்து, பாட்டு, மத்தளம் வாசித்தல், முதலியவற்றில் வல்லவர் என்றும், அந் நாட்டில் தாழ்ந்த வகுப்பினராகவே இவர் கருதப்படு கின்றனர் என்றும், தோல் வேலை, குடை கட்டுதல், மத்தளம் கட்டுதல் முதலியன இவர் புரியும் தொழில் களாம் என்றும், பிறவாறும் கூறப்பட்டுள்ளதென்பர். இங்ஙனம் பாணரும் அவர் பெண்டிரும் பலவேறு தொழில்கள் உடையராகக் கூறப்படினும், அவர் குலத்தொழிலாகக்கொண்டது இசை பாடுதலே என் பது 'பாணன்,' 'பாடினி' என்னும் பெயர்களான் அறியப்படும். 'பாட்டி' என்பதும் இசை பாடு பவள் என்னும் பொருளதே. பாணன், பாடினி இரு வரும் பொருளீட்டுதற்குரிய வேறு முயற்சி யொன்று மின்றி, அரசர், குறுநில மன்னர் முதலாயினர்பாற் சென்று தாம் கற்ற இசைத் திறங்களைப் பாடிக்காட்டி அவர்களை மகிழ்வித்து, அன்னோர் உவந் தளிக்கும் பரிசில் பெற்று மகிழ்தலையே கடமையாகக் கொண்டி ருந்தனர். அக்காலத்து அரசர் முதலாயினர் இன் னோர் இசைக் கலையிற் சிறந்துளோராதலால் இவர் பால் மிக அன்புற்றுத் தமது நாளோலக்கத்தில் இவரை இருக்கச்செய்து, தம் மகிழ்ச்சிக்கு அறிகுறியாகப் பாணற்குப் பொற்றாமரைப் பூவும், பாடினிக்குப் பொன்னரி மாலை, முத்து மாலைகளும் வழங்கி வந்த னர். தலைவன் தலைவியர்க்குள் நிகழும் ஊடலை நீக்கி அவர்களைச் சேர்ப்பிப்பதற்கும் இன்னோர் வாயிலாக

இருந்தனர் என்றால் இவர்க்கு அரசர் முதலாயினோர் எவ்வளவு உரிமை வழங்கி யிருத்தல் வேண்டும். பாணர்கள் பழுமரந் தேரும் பறவைபோல இடைவிடாது வள்ளல்களை நாடிச் சென்று பரிசில் பெறும் வழக்கமுடையராதல் பற்றியே பாணாற்றுப்படை யென்னும் துறையமைந்த செய்யுள் வகையும் ஏற்பட்டது. பத்துப்பாட்டு முதலியவற்றிலுள்ள ஆற்றுப்படைச் செய்யுட்களிலிருந்து பாணர் முதலான பரிசிலர் வறுமையும், அன்னோரை அரசர் முதலாயினோர் எங்ஙனம் ஆதரித்தனர் என்பதும் இனிது புலனாகும். **பொருநராற்றுப் படையிலே** "நும்மிடத்துள்ள இசைக்கலையைத் தான் கேட்பதற்கு முன்பு கொட்டைப் பாசியின் வேர்போல் அழுக்கேறிக் கிழிந்த தையலையுடைய நும் பழைய துணிகளைப் போக்கித் தூய்மையுடைய கொட்டைக்கரை யமைந்த பட்டுடைகளைத் தந்து பெறுதற்கரிய பொற் கலத்தில் விரும்பினபடி யுண்பாய் என்று சொல்லிப் பூக்கமழ் தேறலை மேலும் மேலும் வார்த்து உண்பித்து, ஒளிமிக்க பொற்றாமரைப்பூவை நின் கரிய மயிர் பொலிவு பெறச் சூட்டி, அழகிய பொன்னரி மாலையையும், முத்து மாலையையும் நின் பாடினி அணியக் கொடுத்து, யானைக் கொம்பாற் செய்த கொடிஞ்சியையுடைய நெடிய தேரில் பால் போன்ற நிறத்தினையுடைய நான்கு குதிரைகளைப் பூட்டித் தன் காலாலே ஏழடி பின்னே வந்து தேரின்மீ தேற்றி, மற்றும் நாடும் களிறும் முதலியன தந்து விடுப்பன்" என்று **சோழன் கரிகாற் பெருவளத்தான்** பொருநர்க்குப் பரிசில் கொடுக்கும் இயல்பு கூறப்பட்டுள்ளது. **சிறுபாணாற்றுப் படை**

யிலே "நீ அவ்வள்ளலை யடைந்து உன்னுடைய யாழை வாசித்து அவன் மனம் மகிழும்படி சில புக ழுரை கூறுமுன்பே மூங்கிலின் உரிபோன்ற மெல்லிய ஆடைகளை உங்கட்கு வழங்கி உடுக்கச் செய்து, நல்ல தேறலையும் உண்பித்து, வீமபாக மென்னும் மடை நூல் விதிப்படி சமைக்கப்பெற்ற பலவகை யுணவு களைப் பொற்கலங்களில் இட்டுத் தான் நின்று உங்களை உண்ணும்படி செய்து, பின்பு மாற்றுரை வென்று அவர்கள்பாற் பெற்ற நிதிகளோடு உயர்ந்த தேர்களையும் காளைகளையும் பாகரோடு பரிசிலாக வழங்கி அன்றே உங்களை விடுவன்" என்று நல்லியக் கோடன் என்னும் வள்ளல் பாணர்க்குப் பரிசில் நல்கு மாறு கூறப்பட்டுள்ளது. மற்றும் பாணரின் வறுமை மிகுதியும், அவர்கள் காடு மலை யெல்லாங் கடந்து வள்ளியோரைத் தேடிச் செல்லுமாறும்

"கையது கடனிறை யாழே ; மெய்யது
புரவல ரின்மையிற் பசியே ; அரையது
வேற்றிழை நுழைந்த வேர்நனை சிதாஅர்
ஓம்பி யுடுத்த வுயவற் பாண."

எனவும்,

"ஆனினங் கலித்த வதர்பல கடந்து
மானினங் கலித்த மலைபின் னொழிய
மீனினங் கலித்த துறைபல நீந்தி
உள்ளி வந்த வள்ளுயிர்ச் சீறியாழ்ச்
சிதாஅ ருடுக்கை முதாஅரிப் பாண."

எனவும் வரும் புறப்பாட்டுக்களினாலும் நன்கு அறியப் படும்.

மற்றும், போர்க்களத்திலே சென்று வெற்றி யுற்ற தம் அரசரது களத்தை வாழ்த்துதலும், வைகறைப் பொழுதிலே துயிலெழு மங்கலம் பாடித் தம் வேந்தனைத் துயிலெழுப்புதலும் போல்வனவும் பாணர்க்குரிய செயல்களாகும். அரசர்களும் தாம் பகைவர் பாற் பெற்ற களிறு முதலியவற்றைப் பாணர்க்குப் பரிசிலாகக் கொடுத்து மகிழ்தலையே கடப்பாடாகக் கொண்டிருந்தன ரென்பது பழைய செய்யுள் பலவற்றால் அறியப்படுகின்றது. "பாண் கடன் இறுக்கும் வள்ளியோய்", "பாணர் புரவல," "பாண் முற்றுக நின் நாண்மகிழ் இருக்கை" என வருவனவெல்லாம் அக்காலத்து அரசராயினோர் பாணர் களைப் புரத்தலையே தம் முதற் கடனாகக் கொண்டிருந் தனர் என்பதனை விளக்கும். இங்ஙனம் அரசர்பாற் பரிசிலாகப் பெற்ற பெருஞ் செல்வத்தை யெல்லாம் பாணர்கள் தமக்கென வைத்துக் கொண்டிராது, ஏனைய வறிஞராதியோர்க்கு அவற்றை ஓம்பாது வீசித் தாம் பின்னும் பின்னும் வறுமைநிலை யெய்தி வள்ளியோரைத் தேடிச் சென்று பாடி மகிழ்விப்பர். அங்ஙனம் தாம் வறியராயிருந்து இடைவிடாது இசை பாடி வாழ்க்கையை நடத்துவதே அவர்க்கு இன்ப மாம் போலும்.

## தமிழ் இசை.

இசையாவது செவி வழியாகச் சென்று உள் ளத்தைக் கனிவிக்கும் நுட்பமுடைய இனிய ஓசை யாகும். வண்டு, குயில், கிளி, பூவை முதலிய உயிர்க

ளிடத்து இயற்கையாகவே இவ்வின்னோசை அமைந்து இன்பம் விளைக்கின்றது. மக்கள் தம் அறிவின் திறத்தினால், பற்பல வகையாகிய இன்னிசைகளைத் தம் மிடற்றிலிருந்தும், கருவிகளிலிருந்தும் உண்டாக்குகின்றனர். இசை யியல்புகளையும், வேறுபாடுகளையும் சிறப்பாக அறியாவிடினும் பொதுவாக மக்கள் யாவரும் இசையை விரும்புதலுடையரே. பச்சிளங் குழவியும் இசையை விழைகின்றது. ஆனினங்கள் இசையைக்கேட்டு அசையிடா திருக்கின்றன. கொடிய வன விலங்குகளும், பாம்பு முதலியனவும் இசைக்கு வசமாகின்றன. புற்பூடு முதலிய ஓரறிவுயிர்களும் இசையாற் செழுமையுறு மென்பர். உடம்பிலே பிணியும் உள்ளத்தே கவலையும் உடையோர் இசையினைக் கேட்டு அத்துன்பங்களை மறந்து இன்புறுதல் இயல்பு.

> "யாழ், நறையடுத்த அசுணநன் மாச்செவிப்
> பறையடுத்தது போலுமென் பாவரோ." (கம்ப. அவை)

> "காழ்வரை நில்லாக் கடுங்களிற் றொருத்தல்
> யாழ்வரைத் தங்கி யாங்கு" (கலி. பாலை)

என்பன விலங்குகள் இசைக்கு வயமாதலையும்,

> "ஆறலை கள்வர் படைவிட அருளின்
> மாறுதலை பெயர்க்கும் மருவின் பாலை." (பொருந. 21—2)

என்பது இசையானது மக்களின் அருளுக்கு மாறாகிய மறத்தன்மையைப் போக்கு மென்பதனையும் புலப்படுத்தா நிற்பன.

முழுமுதற் பொருளாகிய இறைவன் இசை வடிவமாகவும், இசையின் பயனாகவும் இருக்கின்றான் என்றும், இசை பாடுகின்றான் என்றும், இசை பாடுவார்க்கு அருள் செய்கின்றான் என்றும் ஆன்றோர் கூறுவர்.

"ஏழிசையாய் இசைப் பயனாய்" என **நம்பியாரூரரும்,**

"எம்பிறை நல்வீணை வாசிக்குமே" எனவும்,

"அளப்பில கீதஞ் சொன்னார்க் கடிகள் தாம் அருளுமாறே" எனவும் **திருநாவுக்கரசரும்** கூறுதல் காண்க. இத்தகு சிறப்புடைய இசைக் கலையினை நம் முன்னோர் முதன்மையுற மதித்து வந்தன ரென்பது கலைகட் கெல்லாம் தெய்வமாகிய நாமகள் கையில் வீணையை அமைத்துள்ளமையால் விளங்கா நிற்கும்.

இனி, இசைக் கலையானது தமிழகத்திலே பண்டு தொட்டு எங்ஙனம் விளக்க முற்றிருந்த தென் பதனைத் தமிழ் நூல்களின் ஆதரவு கொண்டு நோக்குதும். தமிழ் மொழியானது மிகப் பழைய காலத்தில் இயல், இசை, நாடகம் என முப்பெரும் பிரிவுடையதாக இருந்தது. அதனால் முத்தமிழ் என்ற வழக்கு உளதாயிற்று. பழைய சங்க நாட்களில் முத்தமிழ்க்கும் இலக்கிய இலக்கணங்கள் பற்பல இருந்தன. ஆசிரியர் **அகத்தியனார்** இயற்றிய **அகத்தியம்** என்பது முத்தமிழ் இலக்கணமே. தலைச் சங்கப் புலவர்கள்

இயற்றிய பெருநாரை, பெருங்குருகு என்பனவும், நாரதர் இயற்றிய பஞ்சபாரதீயம், அகத்தியர் மாணுக்கராகிய சிகண்டி யென்பவர் இயற்றிய இசை நுணுக்கம் முதலா யினவும் பழைய இசைத் தமிழ் நூல்களாம்.

ஏறக்குறைய நாலாயிரம் ஆண்டுகளின் முன் தோன்றிய பேரிலக்கணமாகிய தொல்காப்பியத்தில் இசையைப் பற்றிய குறிப்புக்களும், இசை பாடு தலையே தொழிலாகவுடைய பாணர் முதலாயினோரைப் பற்றிய குறிப்புக்களும் உள்ளன. அந்நூலிலே முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை என்னும் ஐந்து நிலங்கட்கும் வெவ்வேறு வகையான யாழ் அல் லது பண் உண்டு என்று குறிப்பிடப்படுவதால், அக் காலத்தே தமிழகம் முழுதும் இசைக்கலை பரவியிருந்த தென்பதும், எவ்வகைக் குடிமக்களும் இசையுணர்ச்சி யுடையராய் இருந்தன ரென்பதும் பெறப்படும். தெய்வப்புலமைத் திருவள்ளுவரும் குழல், யாழ் என் னும் இசைக் கருவிகளைப்பற்றியும், பண்ணைப்பற்றி யும் திருக்குறளில் குறிப்பிட்டுள்ளார். மற்றும் சங்கச் செய்யுட்கள் பலவற்றிலும் அவை பற்றிய குறிப் புக்கள் உள்ளன. உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுளாகிய சிலப்பதிகாரத்தில் இசைக் கருவிகளின் பெயர்களும், இலக்கணங்களும், கருவிகளிலும் கண் டத்திலும் இசைகள் பிறக்கும் முறைமையும், பிறவும் விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

அக்காலத்திலே பேரியாழ், மகர யாழ், சகோட யாழ், செங்கோட்டியாழ் என நால்வகை

யாழ்கள் இருந்தன. பேரிகை, மத்தளம், தண்ணுமை, குடமுழா, இடக்கை, உடுக்கை முதலாய பல்வேறு தோற்கருவிகள் வாசிக்கப்பட்டன. குழல், யாழ் என்பவற்றிற்கு நிகரான வேறு இசைக்கருவிகள் இற்றைநாள் காறும் தோன்றாதிருத்தலே அவற்றின் பெருமையைப் புலப்படுத்துவனவாம். அவற்றுள்ளும் யாழ் மிகச் சிறந்ததொன்று. தாள இலயங்களுடன் மிடற்றினும் ஒருங்கு பாடிக்கொண்டு வாசித்தற்குரிய கருவி யாழ் ஒன்றே யாகும்; அச்சிறப்புப்பற்றியே பண் என்பதற்கும் யாழ் என்னும் பெயர் வழங்குவதாயிற்று. ஒவ்வொரு பெரும் பண்ணிற்கும் ஒவ்வொரு வகையாக நரப்புக் கோவைகளை அமைக்கவேண்டி யிருந்தமையின் அப்பெயர் வழங்கலாயிற்று எனலுமாம். பேரியாழ் இருபத்தொன்றும், மகரயாழ் பத்தொன்பதும், சகோடயாழ் பதினான்கும், செங்கோட்டியாழ் ஏழும் ஆகிய நரம்புகளையுடையன;

> "ஒன்று மிருபதும் ஒன்பதும் பத்துடனே
> நின்ற பதினான்கும் பின்னேழும்—குன்றாத
> நால்வகை யாழிற்கு நன்னரம்பு சொன்முறையே
> மேல்வகை நூலோர் விதி."

என்பது காண்க. இந் நால்வகை யாழுள்ளும், சீறியாழ் ஆகிய செங்கோட்டியாழும், பேரியாழுமே பண்டு பாணர்கள் கையகத்து நிலவின எனவும், மகரயாழும், சகோட யாழும் பின்பு தோன்றி விரிந்தன எனவும், இவை யாவற்றிற்கும் முற்பட்ட காலத்தில்

வில்யாழ் என்பதொன் றிருந்ததெனவும் கூறுவர். இசைத்தமி ழாராய்ச்சியிற் சிறந்த உயர்திரு **விபுலா னந்தவடிகள்** யாழ் வரலாறு பற்றிக் கூறி யிருப்பது ஈண்டு அறிந்தின்புறற்பாலது.

*"முன்னாளிலே பாணன் கையிலும் பாடினி கையிலு மிருந்த யாழ்க் கருவி இளங்கோவடிகள் காலத்திலே இசையாசிரியன் கையிலும் நாடக மகள் கையிலும் போய்ச் சேர்ந்துவிட்டது. அதற் கேற்ப அக்கருவியும் 'சித்திரப் படத்துட் புக்குச் செழுங் கோட்டின் மலர் புனைந்து, மைத்தடங்கண் மணமக ளிர் கோலம்போல் வனப்பெய்தி' விளங்கியது. ஆளு டைய பிள்ளையார் காலத்திலே தெய்வமீந்த பொற்பலகை மீதேறி அன்பருள்ளத்தை யுருக்கிய அருட்கருவி யாயிற்று. கொங்கு வேளும் திருத்தக்க தேவரும் நூலெழுதிய காலத்திலே அரசிளங் குமரிகள் கையிலேறி, அவர் மனம் விரும்பிய காதலரை அவருக் களிக்குங் கருவியாயிற்று. சரித்திர கால வெல்லைக் கெட்டாத காலத்திலே 'வில் யாழ்' எனப் பெயரிய குழவியா யுதித்து மழலைச்சொற் பேசி அனை வர்க்கும் மனமகிழ்வு தந்து, 'சீறியாழ்' என்னும் பேதைப் பருவச் சிறுமியாகிப் பாடினியோடு நாடெங்கும் திரிந்து ஏழைகளும் இதயங் களிப் பெய்த இன்சொற் கூறி, பின்பு 'பேரியாழ்' என்னும் பெயரோடு பெதும்பைப் பருவ மெய்திப் பாணனோடு சென்று குறுநில மன்னரும், முடி மன்னரும்,

---

* தமிழ்ப்பொழில், துணர் - 17 : மலர் 2.

தமிழ்ப் புலவரும், கொடை வள்ளல்களும் கேட்டு வியப்பெய்தும் வண்ணம் நயம்பட உரை பகர்ந்து, அதன்பின் மங்கைப் பருவ மெய்தி, அப் பருவத்திற் கேற்பப் புதிய ஆடையும் அணிகலனும் பூண்டு, நாடக அரங்கத்திலே திறமை காட்டி, மடந்தைப் பருவும் வந்தெய்துதலும், பெரும்பாணரோடும், விறலியா ரோடும் அம்மையப்பர் உறைகின்ற திருக்கோயில்கள் பலவற்றை வலம்வந்து, தெய்வ இசையினாலே அன்ப ருள்ளத்தை யுருக்கி, முத்தமிழ் விரகராற் பாராட்டப் பட்டு, அரிவைப் பருவம் வந்து எய்துதலும் அரசிளங் குமரிகளுக்கு இன்னுயிர்ப் பாங்கியாகி அவர்க்கேற்ற தலைவரை அவர்பாற் சேர்த்திச் சீரும் சிறப்பு மெய்தி நின்ற 'யாழ்' என்னும் மென்மொழி நங்கை இருந்த விடந் தெரியாமல் மறைந்து போயினள். ஐயகோ! நினைக்க நெஞ்சு புண்ணுறும் இந்நிகழ்ச்சி எவ்வண் ணம் நேர்ந்தது?"

இதன்கண், பேதைப் பருவமும் பாடினிக் குரி மையும் சீறியாழுக்கும், பெதும்பைப்பருவமும் பாணற் குரிமையும் பேரியாழுக்கும் அணிநலந் தோன்றக் கூறப்பட்டிருப்பினும், முதற்கண் வில் யாழும், அடுத் துச் சீறியாழ் பேரியாழ் என்பனவும் பாணன் பாடினி இருவர்க்கும் உரியனவாயிருந்தன என்பதே அடிகள் கருத்தெனக் கொள்ளல்வேண்டும். குரல் முதலாய ஏழ் இசை (சுரங்) களில் ஒவ்வொன்றுக்கு ஒவ்வொரு நரம்பாகச் சீறியாழில் ஏழு நரம்புகள் இருந்தன வெனவும், அவ்விசைகளை வலிவு, மெலிவு, சமன் என்னும் மூவகை யியக்கில் நடத்துதற்குப் பேரி

யாழில் இருபத்தொரு நரம்புகள் அமைந்திருந்தன வென்வும் கொள்ளலாமோ வென்பது அறிஞர் ஆராய்ந்து துணிதற் குரியது.

இனி, பாணன், பாடினி முதலாயினுர் கையகத்திருந்த இவ்வியாழ்களின் இலக்கணங்களைப் பொருநராற்றுப் படை, பெரும்பாணுற்றுப் படை, மலைபடுகடாம் என்பவற்ருல் ஒருவாறு அறியலாகும். அவற்றின்கண் யாழின் உறுப்புக்களாகிய பத்தர், கோடு, ஆணி, திவவு, போர்வை, நரம்பு முதலியன அவற்றினியல்பு விளங்கத்தக்க உவமங்களுடன் கூறப் பட்டுள்ளன. அவற்றுள் நரம்பொன்ருெழிய ஏனைய வெல்லாம் நால்வகை யாழுக்கும் பொருந்துவனவே; கோட்டின் வடிவு முதலியவற்றிற் சிறு வேற்றுமை யிருத்தலுங் கூடும். இப்பொழுதுள்ள வீணை என்பதும் அவ்வுறுப்புக்களால் இயன்றுள்ளதே யாகலின் இது முற்றிலும் யாழின் வேறுபட்ட இசைக் கருவி யெனல் சாலாது. ஒரு காலத்து வீணை யென்னுஞ் சொல் மக்கள் உடம்பினையும், மிடற்றுப் பாடலையும் குறித்திருக்க வேண்டுமென்பது முதுகென்புக் கோவைக்கும், மிடற்றுப்பாடலுக்கும் முறையே வழங்கும் வீணைத் தண்டு, சாரீர வீணை என்னும் பெயர்களாற் புலனும். பின் மிடற்றுப் பாடல் யாழிசையோடு ஒருங்கு நிகழ்ந்தவழி அத்தொகுதியை அச்சொல் குறிப்பதாயிற்று; சீவக சிந்தாமணியில் "வீணைச் செல்வம்" (411) என்புழி, 'வீணை-தாளத் தோடே கண்டத்திலும் கருவியிலும் பிறக்கும் பாட்டு'

எனவும், "விருந்தாக யாழ்பண்ணி வீணைதான் ரேற் பான், இருந்தா ளிளமயில்போ லேந்திலேவேற் கண் ணுள்" (730) என்புழி, 'வீணை யென்றது யாழையும் பாட்டையும்' எனவும் ஆசிரியர் நச்சினுர்க்கினியர் கூறியிருப்பது காண்க. "இன்னிசை வீணையர் யாழின ரொருபால்" (திருவாசகம்: திருப்பள்ளி யெழுச்சி-4) "குழலும் வீணையும் யாழுமென் றினை யன குழைய" (கம்ப. சுந்தரகாண்டம்) என்றுங்கு இருபெயரும் சேர்ந்து வரும் இடங்களில் வீணையை மிடற்றுப் பாட லென்றுதல், யாழிற் சிறிது வேறு பட்ட கருவி யென்றுதல் கொள்ளுதல் பொருத்தமாம். எனினும் வீணை யென்னுஞ் சொல் யாழின் மறு பெய ராகவும் வழங்கலுற்ற தென்பதனைச் சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி என்னும் காப்பியங் களானும், தேவாரம் முதலிய திருமுறைகளானும் அறியலாகும்.

இவ்வாற்றுல் தமிழகத்திலே பண்டு பாணர் முதலாயினுர் கையில் விளங்கிய சீறியாழே தன் உடலுறுப்புக்களைக் காலத்துக்கேற்ற புதிய வண்ணங் களால் அழகு செய்துகொண்டு வீணை யென்னும் பெயரினைத்தாங்கி இசைப்புலவர் கையில் மிளிர்கின்ற தென்பது போதரும். மிகப் பழைய காலத்தே வீணை யென்பதோர் இசைக்கருவி ஆரியமக்கள்பால் இருந்த தெனினும், அஃது இப்பொழுதுள்ள வீணையின் முற் றிலும் வேறுபட்டதொன் றென்பது ஆராய்ச்சியாளர் துணிபாம்.

இனி, ஷட்ஜம், ரிஷபம், காந்தாரம், மத்தியமம், பஞ்சமம், தைவதம், நிஷாதம் என்னும் ஏழு சுரங்கட்கும் தமிழிலே குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் எனப் பெயர்கள் வழங்கின. சுரம் என்பதற்கு இசை என்பதும், நரம்பு என்பதும் தமிழ்ப் பெயர்கள். சுருதி யென்பது அலகு, மாத்திரை என்னும் பெயர்களானும், இராகம் என்பது பண், திறம் என்னும் பெயர்களானும் பண்டு வழங்கின. பண்ணுக்கு யாழ் என்பதும் ஓர் பெயராகும். குரல் முதலான ஏழிசைகட்கும் 4, 4, 3, 2, 4, 3, 2 என்னும் எண்ணுள்ள அலகுகள் இருந்தன வென்பது,

> "நான்கு நான்கு மூன்று மிரண்டும்
> நான்கு மூன்று மிரண்டு மாத்திரை
> குரன்முத லாகக் கூறு மென்ப" (பிங். 1413)

எனவும், ஏழு நரம்புகளில் முதலிற் றோன்றியது தாரமாக, அதினின்று அதற் கைந்தாவதாகிய உழையும், உழையினின்று அதற் கைந்தாவதாகிய குரலும், இவ்வாறே ஏனையவும் தோன்றின வென்பது,

> "தாரத்து ளுழையும் உழையுட் குரலும்
> குரலு ளிளியும் இளியுட் டுத்தமும்
> துத்தத்துள் விளரியும் விளரியுட் கைக்கிளையும்
> தம்மிற் பிறக்குந் தகுதிய வென்ப" (பிங். 1411)

எனவும்வரும் பிங்கல நூற்பாக்களான் அறியப்படும். வெவ்வேறு வகையான பண்களைத் தோற்றுவித்தற்

பொருட்டுக் குரல் முதலான ஏழ் நரம்புகளில் ஒவ்வொன்றும் முதலாக நிறுத்தப் படுவதுண்டு. அங்ஙனம் நிறுத்தப்படும் நரம்பும் குரல் எனப்படும். குரல் குரலாயது செம்பாலை, துத்தம் குரலாயது படுமலைப் பாலை, கைக்கிளை குரலாயது செவ்வழிப் பாலை, உழை குரலாயது அரும்பாலை, இளி குரலாயது கோடிப் பாலை, விளரி குரலாயது விளரிப் பாலை, தாரம் குரலாயது மேற்செம்பாலை என ஏழு பாலையிசை பிறக்குமாறு கூறப்பட்டுளது.

> "நிறைநரம் பிற்றே பண்ணெண லாகும்"
> "குறைநரம் பிற்றே திறமெனப் படுமே"

என்னும் திவாகர நூற் பாக்களானே ஏழ் நரம்பானும் இயன்றது பண்ணும் என்பதும், ஆறு ஐந்து நான்கு எனக் குறைந்த நரம்புகளான் இயன்றவை திறமாம் என்பதும் பெறப்படும். திறங்களும் பண்ணென்னும் பெயரால் வழங்கப்படுதல் உண்டு. பாலையாழ், குறிஞ்சி யாழ், மருத யாழ், செவ்வழி யாழ் எனப் பெரும் பண்கள் நான்கு; இவை ஒவ்வொன்றும் அகநிலை, புறநிலை, அருகியல், பெருகியல் என்னும் இன வேற்றுமையால் நந்நான்கு ஆகப் பண்கள் பதினாறு ஆகும். நான்கு பண்ணுக்கும் திறம் இருபத்தொன்று; அவையும் அகநிலை முதலிய வேறுபாட்டால் எண்பத்து நான்காகும். இவற்றுடன் தாரப் பண்டிறம், பையுள் காஞ்சி, படுமலை என்னும் திறம் மூன்று கூடப் பண்கள் நூற்றுமூன்றென்னும் தொகை பெறும். இவற்றிற்குரிய பெயர்கள்

திவாகர, பிங்கல நிகண்டுகளால் விளக்கமாம். பண் நூற்று மூன்றென்றல் ஓர் மரபு எனவும், உண்மை யாகவே பண்கள் இத்துணையென வரையறுக்கலாகா தெனவும் இசை யாராய்ச்சியிற் சிறந்தோர் கூறுவர். சிலப்பதிகார அரங்கேற்று காதை யுரையில் "இசை-யென்றது நரப்படைவால் உரைக்கப்பட்ட பதினோராயிரத்துத் தொள்ளாயிரத்துத் தொண்ணூற் றொன்றாகிய ஆதி யிசைகளும் என்றவாறு; அவை யாவன: 'உயிருயிர் மெய்யள வுரைத்தவைம் பாலி னும், உடறமி ழியலிசை யேழுடன் பகுத்து, மூவேழ் பெய்தந்......, தொண்டு மீண்ட பன்னீ ராயிரங், கொண்டன ரியற்றல் கொளைவல்லோர் கடனே' என்னுஞ் சூத்திரத்தால் உறழ்ந்து கண்டு கொள்க" என்றுரைப்பர் அரும்பத வுரையாசிரியரும், அடி யார்க்கு நல்லாரும். சூத்திரம் சிதைவுற்றமையின் இசைகள் அத்தொகையின வாதற்குரிய வழிகள் விளங்கவில்லை யாயினும், அச் சூத்திரம் தொண்டு மீண்ட (ஒன்பது நீங்கிய) பன்னீராயிரம் இசைகளைத் தோற்றுவிக்கும் முறைமையைக் கூறுகின்றதென்பது உண்மை. **சிலப்பதிகாரம், பரிபாடல், சீவகசிந்தாமணி** முதலியவற்றானும், அவற்றின் உரைகளானும், **திவாகரம், பிங்கலம்** முதலிய நிகண்டுகளானும் தமி ழிசை பற்றிய எத்தனையோ பல செய்திகள் அறியப் படும். சிலப்பதிகாரம் இசைக்கு இலக்கணங் கூறுவ தன்றிச் சிறந்த இசைத்தமி ழிலக்கியமாகவும் உள் ளது. **தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருவாய் மொழி** முதலியவை அளப்பரும் பெருமை

வாய்ந்த இசை யிலக்கியங்கள். இவ்வாறாய இசை யியல்புகளை யெல்லாம் நுண்ணிதின் அறிந்து ஏழ் நரம்புகளானும் பண்களையும் திறங்களையும் வழுவின்றிப் பாட வல்லராய்ப் பண்டை நாளிலே பாணர்கள் விளங்கினரென்பது,

"குழலினும் யாழினும் குரன்முத லேழும்
வழுவின் றிசைத்து வழித்திறங் காட்டும்
அரும்பெறன் மரபிற் பெரும்பா ணிருக்கையும்"
(சிலப். 5 : 35-7.)

என்னும் **இளங்கோவடிகள்** கூற்றால் இனிது புலனாகும். இங்ஙனம் அடிகள் சிறப்பித் தோதிய பாணர் குலத்தை நினைக்கும்பொழுது அறிஞர் பலருடைய அகக்கண்ணுக்கும் எதிரே தோன்றுவோர் திருநீலகண்ட யாழ்ப்பாணர், திருப்பாணாழ்வார், பாணபத்திரர் என்னும் மூன்று பெரியோருமாவர்; அக்குலத்தே பெயர் சுட்டி அறியப்படும் பெருமக்களாவாரும் அம்மூவரே. அவர்கள் வரலாற்றை இனி முறையே சிந்தித்துப் பயனெய்த முயல்வோமாக.

---

# திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனார்.

'திருநீல கண்டத்துப் பாணனார்க் கடியேன்"
—திருத்தொண்டத்தொகை.

"தனையொப் பருமெருக் கத்தம் புலியூர்த் தகும்புகழோன்
நினையொப் பருந்திரு நீலகண் டப்பெரும பாணனைநீள்
சினையொப் பலர்பொழிற் சண்பையர் கோன் செந்
[தமிழொடிசை
புனையப் பரனருள் பெற்றவ னென்பரிப் பூதலத்தே"
—திருத்தொண்டர் திருவந்தாதி.

## யாழ்ப்பாணர் தோற்றமும், மதுரையிற் பொற்பலகை பெற்றதும்.

'வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பு' எனப்படும் தமிழகத்திலே, 'அறந்தரு நாவுக்கரசும் ஆலாலசுந்தரரும் பிறந்தரு' ளும் பெரும் பேறுடைய திருமுனைப்பாடி நாட்டின்கண் திரு எருக்கத்தம்புலியூர் என்னும் திருப்பதி ஒன்றுளது. அப்பதியின்கண் பாண் மரபு ஆற்றிய அருந்தவத்தால் அவதரித்த பெரியார் திருநீலகண்டப் பெரும்பாணர் என்பவர். அவர் தமது பாடினியாருடன் இறைவன்பால் வைத்த பேரன்புடையராய்ச் சிவபிரான் கோயில் கொண்டிருக்கும் சோணாட்டுத் திருப்பதிகள் பலவற்றிற்குஞ்

சென்று யாழிசை பாடி வணங்கி, பின்னர், ஆலவா யமர்ந்த அருமருந்தாய தேவ தேவன் திருந்தடிகளை வணங்க நினைந்தார். நினைந்தவர், செந்தமிழ்ப் பாண்டி நாட்டிலே செய்யாட் கிழைத்த திலகம்போல் விளங்கும் மாட மதுரையை அடைந்து, குன்றவில்லி பார் கோயில் வாயிலை யெய்தி நின்று, தமது குற்ற மற்ற யாழின்கண் நரம்புகளை வலித்துப் பதிஞற் கோவைப் பாலை நிலையாகச் சுரங்களை அமைத்து, பண் ணல், பரிவட்டணை முதலிய எண் வகையாலும் இசையை எழுப்பி, மங்கை பங்கர்தம் தேவபாணி களை யாழிலிட்டு வாசித்தார். பாட்டுக் குருகும் தமிழ்ச் சொக்கநாதன் ஆகிய அண்ணல் அதனைக் கேட்டு, அற்றைநா ளிரவிலேயே தமது தொண்ட ரனைவர்க்கும் கனவிலே தோன்றி, யாழ்ப்பாணரைத் திருமுன்பழைக்குமாறு பணிக்க, அடியார்களெல் லோரும் அவ்வண்ணமே அருண்மிக்க பெரும் பாணரை முப்புரஞ்செற்ற முதல்வன் றிருமுன் அழைத்தேகினர். பாணரும் அஃது ஆண்டவன் அருட் பணியாம் என்பதனை யுணர்ந்தமையாலே மறைமுதல்வன் திருமுன் பமர்ந்து, இறைவனுடைய அருட் செயல்கள் பலவற்றையும் மெய்யன்புடன் பாடினர். அதனைத் திருச்செவி யேற்று மகிழ்ந்த கூடற்பெருமான், 'பேரன்போடு பெரும்பாணர்பாடும் இந்த யாழானது தரையிலுள்ள குளிர்ச்சியால் தாக்கப் படின் ஓசை குறையுமாகலின், அவருக்கு ஓர் அழகிய பலகையை இடுவீராக' என்று வானொலியால் அருளிச்செய்ய, அடியார்களும் அவ்வாறே இட்டனர்.

நற்றமிழ்ப் பாணனாரும் இறைவன் திருவருளை நினைந்து, திப்பியமுடைய அப் பொற்பலகையின் மேவி, நாளும் யாழிசை விரித்து அங்கயற்கண்ணி பங்கனது வள்ளன்மையை உலகனைத்தும் அறியுமாறு பரவினார்

## பாணர்க்கு ஆரூர்ப் பெருமான் காட்சியளித்தது.

யாழ்ப்பாணர் பின்னர், முன்னவன் அருள் பெற்று எண்ணருந் திருப்பதிகளை நண்ணி வணங்கி, அமரர் நாடாளாதே ஆரூர் ஆண்ட அம்மான்றன் திரு வாரூர்ச் செழும்பதியை அடைந்தார். அடைந்து, திருக்கோயிலின் திருவாயின் முன்னர்ச் சென்று, இறைவனது காலனைக் காய்ந்த பெருவலியையும், அடியார்க்குத் தாயினுமினிய பேரருள் சுரக்கும் தண்ணளியையும் யாழிலிட்டுப் பாட, புற்றிடங்கொண்ட பெருமான் அதனைக்கேட்டு, யாழ்ப்பாணர் நேரே தம்மைத் தரிசிக்குமாறு வடதிசைக்கண் ஒரு வாயிலை வகுத்தருளினார். அன்பர் அவ்வழியே உட்சென்று மூலத்தானப் பெருமானை வணங்கிப் பலநாள் அங்கிருந்தனர்.

## யாழ்ப்பாணர் ஞானசம்பந்தரைத் தலைக்கூடியது.

பாணர் பின்பு தம்பிரானருளால் திருவாரூரினின்றும் அகன்று நஞ்சணிகண்டன் உறையும் நற்

பதிகள் பலவற்றையும் பணிந்துகொண்டு, ஊழிப் பெருவெள்ளத்தில் மிதந்த தோணிபுரப் பெம்மான் திருவருளால் உலகமீன்ற உமையம்மையார் ஞானங் குழைத்த பாலடிசில் உண்பிக்க உண்டருளிய **திருஞானசம்பந்தப்** பெருந்தகையாரின் திருவடிகளை வணங்கும் பொருட்டுச் சீகாழித் திருப்பதியை அடைந்தார். திருநீலகண்டப் பெரும்பாணர் தெள்ளமுதின் இன்னிசை பாடும் மனைவியாருடன் வருவதனை யறிந்த காழியர்கோன் அவரை எதிர்கொள்ள, இசைப்பாணர் பிள்ளையாரின் செந்தாமரை மலரனைய திருவடிகளிற் பணிந்தெழுந்து பேரார்வமுடன் இறைஞ்சிப் பரவி, அத்தகைய பெருவாழ்வு தமக்கு வந்தமை குறித்து அளவற்ற மகிழ்ச்சி யடைந்தார். அப்பொழுது, ஞானமுண்ட பெருந்தகையார் அவரை அன்பொடு நோக்கி, 'நீர் ஈண்டு மகிழ்ச்சியுடன் அணையப்பெற்ற நற்பயனை யுடையேம்' என்று இளநிலாப்போலும் நகைமுகிழ்ப்ப உரைத்தருளி, அவரை உடன்கொண்டுசென்று, தோணியப்பர் திருக்கோயிலின் புறமுன்றிலை யடைந்து கும்பிடச்செய்து, 'உங்கள் இறைவனுக்கு யாழிசை பாடுவீராக' என மொழிந்தனர். பாலறுவாயரின் அருண் மொழியைப் பெற்ற பாணர் அவரை வணக்கஞ் செய்து, யாழினை வீக்கி, முறைமையினுல் இசையை ஆராய்ந்து இறைவன் பாணியினைப் பாடினியாருடன் பாடி யாழினை வாசித்தனர். வாசிக்க, ஞானசம்பந்தர் அளவற்ற மகிழ்ச்சி அடைந்தனர். நான்மறையாளர்கள் வியப்பெய்தினர். யாழினின்று எழும் இன்னிசையுடன்

அவ்விருவரது மிடற்றிஞெலியும் ஒன்றி ஒருங்கே தோணியிறை மருங்கு செல்லும் மாண்பினை, இன்னிசை கேட்கும் கின்னரப் புட்கள் படிந்த விசும்பின் மீது நின்று, ஏழிசை நூற்களைத் தெளிவுற வுணர்ந்த கந்தருவர் விஞ்சையர் முதலியோரும் பாராட்டி எடுத்துரைத்தனர். தோணியப்பர் திருவடிகளைப் பரவிப் பண்ணமைந்த யாழிசையுடன் பாணர் பாடிய பின்னர், பிள்ளையார் அவர்களை அழைத்துப்போய் உறைவிடம் அமைத்து நல்விருந் தளித்தனர்.

ஞானத்தின் திருவுருவான முத்தமிழ் விரகரின் பேரருளைப் பெற்ற பெரும்பாணர் அவர் இறைவன் மீது பாடிய திருப்பதிகங்களை உள்ளபடியே கேட்டலும் கசிந்துருகுகின்ற பேரன்புடன் தெள்ளமுத முண்டவர்போலச் சிந்தை களிப்புற வணங்கிஞர். காழிப்பதியோர் தவப்பயனுய கவுணியர்கோன் ஆழி நஞ்சயின்றவர் அடிபோற்றும் பதிக இசையினை ஏழிசையும் பணிகொண்ட பெரும்பாணர் தம் யாழிலிட்டுப் பாடி அனைத்துயிரையும் மகிழ்வித்தனர் இன்னணம் பாடி மகிழ்வித்த இசைப்பாணர், பின்னரும் அருமறைக் கன்றின் திருவடிபணிந்து, 'இன்னும் அடிகள்நீர் அருளிச் செய்யும் திருப்பதிகங்களின் இசையையும் அடியேன் யாழிலிட்டு நும்மைப் பிரியாமற் சேவிக்கும் பேற்றினை அருள வேண்டும்' என வேண்டினர். பிள்ளையாரும் உவகையுடன் அதற்கிசைந்தருள, பெரும்பாணர் 'தம்பிரான் அருள் இதுவே' எனப் பேணி, மன்னிய இசை வடிவான

3084



மதங்க சூளாமணியாருடன் துன்னிய இன்னிசைப் பதிகங்களை முறையாக யாழிற்றெடுத்து வாசித்து, அன்றுபோலவே என்றும் நீங்காத பெரு நட்புடன் அமர்ந்திருந்தனர்.

## பிள்ளையாருடன் பாணர் தில்லையை அடைந்தது.

அந்நாட்களில், திருஞானசம்பந்தப் பெருமான் தில்லைமன்றுள் நடம்புரியும் திருவாளன் திருவடி பணிதற்கு உள்ளத்தெழுந்த பெருங்காதல் வெள்ளத்தாற் றுண்டப்பட்டு, அதனைத் தாதையார்க்கும் பாணர்க்கும் அறிவுறுத்தி, அவ்விருவரும் உடன் வரத் தோணியப்பர் திருவருள்பெற்று அடியார் குழாத்துடன் புறப்பட்டார். தில்லை நகரத்தோரால் பல்வகைச் சிறப்புக்களுடன் எதிர்கொள்ளப்பெற்றுப் பெருமானை வணங்குதற்குச் சென்ற ஞானக் கன்றின் உடன் போந்த நற்றமிழ்ப் பாணர் அன்னவர் தஞ் செந்தமிழ்த் திருப்பதிக இசையை யாழிற்றெடுத் தேத்தி வணங்குவாராயினர். பின்னர் அந்நகரத்தின் கண் உறைதற்கு அஞ்சிய பாலறுவாயர் திருவேட் களம் எய்தித் திருப்பதிகம் பாடி, அங்குறைந்தே நாடொறுஞ் சென்று மன்றுடை மிறைவன் திருக்கூத் தினைக் கும்பிட்டு வருபவர், ஒருநாள், தில்லைவாழந் தணர் மூவாயிரவரும் இறைவன் திருவடிக்கு அணுக் கராகும் பேறுடைமையையும், அவரது சீலத்தின் அளவின்மையையும் நினைந்து வியந்து, ஆராத காத

லுடன் திருவேட்களம் கடந்து தில்லையை அடையும் பொழுது, அவர் கண்களுக்கு அம்பலவாணன் திருவருளால் அவர்களைவரும் கணநாதர்களாய்த் தோன்றினர். ஆளுடைய பிள்ளையார் அதனைக் கண்டு அப்பரிசினை யாழ்ப்பாணர்க்குங் காட்டித் தாம் கண்ட அவ்வுண்மையைப் பதிகத்தி லமைத்துப் பாடிப் பரவினர்.

## எருக்கத்தம்புலியூர் எய்துதல்.

பின்பு, சண்பையர்கோன் அம்பலக் கூத்தர் அருள்பெற்றுத் தில்லையினின்றும் புறப்படும்பொழுது, பாணனுர் ஞானசம்பந்தர் நல்லடி பணிந்து, 'நிவாநதிக் கரையில் உள்ள அடியேனுடைய பதி முதலாகிய தலங்களை வணங்கிச் செல்வோம்' என வேண்டப் பிள்ளையாரும் அதற்கிணங்கினர். அடியார் கூட்டத் துடன் போந்த ஞானசம்பந்தப் பெருமானேடு திருநீலகண்ட யாழ்ப்பாணர் மதங்கசூளாமணியார் உடன் வர வந்தனர். வந்த யாழ்ப்பாணர் பழனங்களும் தடங்களும் பல கடந்து வானளாவிய சோலை சூழ்ந்த திருஎருக்கத்தம்புலியூரின் மருங்கணைந்ததும் 'அடியேனுடைய பதி இதுவாகும்' என வணங்கி மொழிந்தனர். அதுகேட்ட ஞானக்களிறு பெரிதும் இன்புற்று, ஆண்டு அணைந்து, 'ஐயரே! நீர் அவதரித்திடுவதற்கு இப்பதியானது அளவற்ற பெருந் தவத்தினை முன்னர் ஆற்றியது போலும்' எனச் சிறப்பித்தருளித் திருக்கோயிலிற் சென்று இறைவனை வணங்கித்

3084



திருப்பதிகம் பாடி, அவருடன் பல தலங்கட்குஞ் சென்றனர்.

## சம்பந்தர் யாழ்முரி பாடியது.

இவ்வண்ணம் திருஞானசம்பந்தர் திருப்பதிக டோறும் செல்லும்பொழுது உடன் சென்று பணிந்து திருப்பதிகங்களி னிசையை யாழிலிட்டு வாசித்தும், அவர் காழியிற்றங்கும்பொழுது உடனுறைந்தும் வந்த பேரன்பராகிய பாணனூர் பிள்ளையாருடன் தமது தாய் பிறந்த திருப்பதியாகிய தருமபுரத்திற்கு அணித்தாக வரும்பொழுது, அப்பதியிலுள்ளோர் எதிர்கொண்டு திருவடிகளை வணக்கஞ் செய்து வாழ்த்துவதைக் கண்டு, பெரும்பாணர், அவர்கட்குத் தாம் ஆளுடைய பிள்ளையார் அருளிச்செய்யும் திருப்பதிகங்களை யாழி லிட்டு வாசிக்கும் பெரும் பேற்றினைக் கூறியருளினூர். அதுகேட்ட உறவினர், 'நீர் திருப்பதிகத்தில் எழுந்த ஓசையை அளவுபெற யாழிலிட்டுப் பாடுவதினூலே உலகமெங்கணும் இன்னிசை வளர்கின்ற திருப்பதி கங்களின் பெருமை நிகழ்வதாகும்.' என்றனர். அம் மொழி கேட்ட யாழ்ப்பாணர் உளம் நடுங்கிப் புகலி வேந்தர் திருவடிகளிற் பணிந்து கூறுகின்றூர்: 'எம் பெருமானே! எல்லையிலாப் பெருமையுடைய திருப் பதிகங்களின் இசை அளவுபடாத தன்மையை இவர் களேயன்றி உலகிலுள்ளோர் அனைவரும் அறிந்து உய்தி பெறும்பொருட்டு அத்தகைய திருப்பதிகத் தினை அடிகள் பாடியருளினூல், அடியேன் அரும்

பெறற் பதிகங்களினிசை யாழின்கண் அடங்காமை யைக் காட்டப் பெறுவேன்' என வேண்டினர். வேண்ட, முத்தமிழ் விரகரும் இறைவனைத் தொழுது திருப்பதிகங்களின் உண்மை யிசையானது பூவுலகில் உள்ள மக்களின் கண்டத்திலும் கருவியிலும் எவ் வகை இசை முயற்சிகளாலும் அடங்காத தன் மையைக் காட்டும் வண்ணம் "மாதர் மடப்பிடி" என்று தொடங்கும் யாழ்முரிப்பண்ணைப் பாடி வணங் கினர். ஞானபோனகர் நற்றமிழ்ப் பதிகத்தினைப் பாடித் திருக்கடைக்காப்புச் சாத்தலும், இசைப் பாணர் அருகணைந்து முன்போல் திருப்பதிக இசை யினை யாழிற்றொடுத்தனர்; ஆனால் அவ் வரும்பெறற் பதிகத்தின் இசை யாழின்கண் அடங்காதாயிற்று. அதுகண்ட பெரும்பாணர் அச்சமும் நடுக்கமும் எய்திப் பிள்ளையார் திருவடிகளில் விழுந்து வணங்கி எழுந்து, அவரை நோக்கி, இப்பெருந்தகையார் அருளிச்செய்த அருட்பாக்களின் இசையை யாழி னில் ஏற்பேனெனக் கூறியது இவ்விசைக் கருவியை யான் தொடுதலினாலல்லவோ எனத்தெளிந்து, 'வீக்கிய நரம்புகளையுடைய யாழினால் விளைந்த இத்தீவினையை நீக்குவேன்' என நினைந்து, அதனை உடைக்குமாறு ஓச்சினர். அருமறைப்பிள்ளையார் அதனைத்தடுத்து, 'ஐயரே! நீர் அளவு பொருந்த இசையாக்கிய இக் கருவியினைத் தருவீராக' என்று வாங்கிக்கொண்டு, 'நீர் யாழினை முரிப்பதென்? மங்கைபங்கர் அளித்த திருவருளின் மாண்பனைத்தும் நம்பாலுள்ள இவ் விசைக்கருவியின்கண் அளவுபடுவதாமோ? நமது

இயல்பினுக்கேற்ப, உலகினர் அறியுமாறு இக்கருவி யின் அளவாக இயற்றுதல் அமைவுடையதே. இந்த யாழினைக் கொண்டே இறைவன் திருப்பதிகங்களின் இசை இதனிற் பொருந்தும்படி வந்தவாறு பாடுவீ ராக' என்று கூறி, யாழினைப் பாணர் கையிற் கொடுத்தருள, அவர் அதனைத் தொழுது வாங்கித் தலைமேற் கொண்டார். பின்னர் பாணரும், அவர் தம் கிளைஞரும் பிள்ளையார் திருவடிகளை வணங்கித் துதித் தனர். காழி வள்ளலார் அவர்கட்குப் பெருஞ் சிறப் பருளி அப்பதியின்கண் சிலநாள் இனிதுறைந்து, பின்பு பாணருடன் திருப்பதிகள் பலவற்றிற்குஞ் சென்று பணிந்து, திருநள்ளாற்றினை அடைந்தார். அப்பொழுது அடியார் குழாம் செப்பருஞ் சிறப்புடன் எதிர்கொண்டணையத் தோணிபுரத் தோன்றல் நள்ளாற்று நம்பர் திருக்கோயிலை அடைந்து, ஆராத காதலுடன் "போகமார்த்த" என்னும் புகழ்மிக்க திருப்பதிகத்தை இசை வளரப் பாடித் திருக்கடைக் காப்புச் சாத்திக் கோயிலின் புறத்தணைந்து, பாணரை நோக்கி அப்பதிகத்தை யாழிலிடுமாறு பணித்தருளி, தாம் திருத்தாளங் கொண்டு பாடாநிற்க, பெரும் பாணர் இசைத்தேன் பொழியும் தந்திரியாழைச் சிறக்க வமைத்து இசை கொள்ளப் பாடும்பொழுது வையத்தோர் களிகூர்ந்தனர்; பிள்ளையார் பெருமகிழ் வெய்தினர்.

## திருச்சாத்தமங்கை நிகழ்ச்சி.

இவ்வாறு நள்ளாற்று நன்மருந்தை வணங்கிய புகலி காவலரும் பாணரும் பொன்னி வளங் கொழிக்

கும் தடம்பணை சூழ் தலங்கள் பலவற்றினையும் பணிந்து, செங்கமலம் முகமலரும் திருச்சாத்தமங்கை யென்னும் மூதூரை அடைந்தனர். அடைய, அத் திருப்பதியில் உள்ள மறையவராகிய **திருநீலநக்க நாயனார்**, பாலருவாயர் பாணர் பாடினியாருடனும், தொண்டர் குழாத்துடனும் தம் பதிக்கு எழுந்தருள் வது கேட்டுப் பெருமகிழ் வெய்தி, விஞ்சிய ஆர்வத் துடன் நெடிய நடைப்பந்தரிட்டுத் தோரணம் நாட்டி மாலையும் கொடியும் புனைந்து வீதிகளை அழகுபடுத்தி, நிறைகுடம் முதலிய மங்கலங்கள் அமைத்து முறை மையால் வந்து எதிர்கொண்டனர். எதிர்கொள்ள, ஆளுடைய பிள்ளையார் அடியார் கூட்டத்துடன் அத் திருப்பதியிலுள்ள **அயவந்தி** என்னும் திருக்கோயிலை அடைந்து சிவபெருமானைத் தரிசித்துப் பதிகம் பாடித் திருநீலநக்கர் திருமனையின்கண் எழுந்தருள, அவர், பிள்ளையார் எழுந்தருளிய பெருமைக்குத் தக அடி யார்கள் அனைவர்க்கும் திருவமுது அமைத்துப் பேரன் போடும் விருந்தாற்றினர். அமுது செய்த பின்னர் அந்திப் பொழுது வந்தணைய, ஞானசம்பந்தர் இரவும் தமதில்லின்கண் தங்குவதற்கு ஏற்பன புரிந்தார் நீல நக்கர். வெங்குருவேந்தர், மெய்யடியார்களுடன் இர வில் திருவமுது செய்தபின், நீலநக்கரை அழைத்து, 'திருநீலகண்ட யாழ்ப்பாணர் இன்று இரவு தங்குவ தற்கு ஓர் இடம் கொடுத்தருளுவீராக' என்றனர். அதுகேட்ட திருநீலநக்கனார் பெரிதும் இன்புற்று, நடு மனையில் முத்தீ வளர்க்கும் வேதியின் பக்கலில் அவருக்கு இடங் கொடுத்தனர். அப்பொழுது அவ்

3084



வேதியின்கண் ஆருத செந்தீயானது வலமாகச் சுழி வுற்று ஓங்கி முன்னையினும் பன்மடங்கு சிறப்புடன் ஒப்பற்று விளங்கியது. அதுகண்ட மறையவர் தலைவ ராய நீலநக்கர் பெருமகிழ் வெய்த, பெரும்பாணர் பாடினியாருடன் திருவருளை நினைந்து அதன் பக்க லில் துயில் கொண்டார். கங்குல் நீங்கியபின் கவுணி யர்கோன் அங்கு நின்றும் எழுந்தருளி அயவந்திப் பெருமான்மீது திருப்பதிகம் பாடி, அதன்கண் திரு நீலநக்கரைச் சிறப்பித்தருளி, பின்பு ஏனைய திருப்பதி கட்கு எழுந்தருளினுர். யாழ்ப்பாணரும் ஞானசம் பந்தர் எழுந்தருளும் திருப்பதிகள் அனைத்திற்கும் உடன் சென்று அவர் பாடும் அருமறைப் பொருள் பொதிந்த செந்தமிழ்த் திருப்பதிகங்களுக்கு இன் னிசை வகுத்து யாழியற்றும் பெரும் பேறுடையராய் வாழ்ந்திருந்தனர்.

## வீடுபேறு.

இவ்வண்ணம் திருஞானசம்பந்தப் பெரு மானைப் பிரியாது உடனுறைதலும், அவர் பாடும் திருப்பதிகங்களை யாழிலிட்டு வாசித்தலும் ஆகிய பெரும் பேறுடையராய் வாழ்ந்திருந்த திருநீலகண்ட யாழ்ப்பாணர் ஒரு வைகாசித் திங்கள், மூல நாளிலே நல்லூர்ப்பெருமணம் என்ற திருப்பதியில், ஞானசம்பந்தர் திருமணத்தில் எழுந்த பேரொளியில் தம் பன்னியா ருடன் புகுந்து சிவபெருமான் திருவடிகளில் இரண்டறக் கலந்தனர்.

# ஆராய்ச்சிக் குறிப்பு.

## குருபத்தி.

திருநீலகண்ட யாழ்ப்பாணர் திருத்தொண்டர் புராணத்திற் கூறப்பட்ட தனியடியார் அறுபத்து மூவரில் ஒருவர். இவரது வரலாறு பெரிய புராணத்திலே திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனார் புராணம் என்னும் பகுதியிலன்றி, திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் புராணம், திருநீலநக்கநாயனார் புராணம் என்பவற்றிலும் வந்துளது. சேக்கிழார் புராணத்தில் நாயன்மார்கள் குருபத்தி, இலிங்கபத்தி, சங்கமபத்தி என்பவற்றுள் ஒவ்வொன்றால் முத்தியடைந்தாராகப் பாகுபாடு செய்தவிடத்து,

> "திருஞான சம்பந்தர் திருநாவுக் கரயர்
> திருமூலர் நெடுமாறர் மங்கையருக் கரசி
> கரைசேருங் குலச்சிறையார் யாழ்ப்பாணர் சுறும்பர்
> கணநாதர் அப்பூதி சோமாசி மாறர்
> உரைசேரு மிவர்கள்பதி னொருவர்குரு வருளால்
> உயர்முத்தி யடைந்தவர்கள்."

எனக் குருவருளால் வீடு பெற்றவர்களி லொருவராக இவர் கூறப்பட்டிருத்தலின், ஆளுடைய பிள்ளையார் இவருக்கு அருட் குரவரென்பது முன்னையோர் கருத்தாதல் பெறப்படும்,

## பெயர்.

இவரது பெயர் திருநீலகண்ட யாழ்ப்பாணர், யாழ்ப்பாணர். பெரும்பாணர் எனப் பல படியாக வழங்கப் பெற்றுளது. திருநீலகண்டராகிய பாணர்-யாழ்ப்பாணர்-பெரும்பாணர் என இத்தொடர்கள் விரிக்கற்பாலன. தொடரின் பிற்பகுதி பிறந்த குடியையும் கருவியையும் குறித்தலின், திருநீலகண்டர் என்பது இவருக்கு இடப்பெற்ற பிள்ளைத் திருநாமமாதல் வேண்டும். அறுபத்து மூவரில் திருநீலகண்ட நாயனார்க்கு அப்பெயர் போந்த வரலாறு அவரது புராணத்திற் கூறப்பெற்றுளது. திருநீலகண்டம் என்பது இன்னலை நீக்குஞ் சிறப்புடையதோர் மறைமொழியாகும். திருஞானசம்பந்தப் பெருமான் கொங்குநாட்டிலுள்ள கொடிமாடச் செங்குன்றூரில் அடியார் குழாத்துடன் எழுந்தருளி யிருந்தபொழுது பனி மிகுதியால் அடியார்கட்கு உண்டாய நளிர் சுரத்தைப் போக்குதற்குப் பாடிய "அவ்வினைக் கிவ்வினை" என்னும் பதிகத்தில் ஒவ்வொரு திருப்பாட்டி னிறுதியிலும் 'திருநீலகண்டம்' என்பதனை அமைத்து ஆணை கூறியிருப்பதும், அந்நாட்டினின்றே வெப்பு நோயை ஓட்டிய அப்பதிகம் திருநீலகண்டப்பதிகம் என வழங்கப் படுவதும் அதற்குச் சான்றாகா நிற்கும். யாழ்ப்பாணர்க்கு இப் பெயரிட்டிருப்பது அம்மரபினோர் அந்நாளில் எத்துணைச் சிவபத்தி மாண்பினரா யிருந்தன ரென்பதனைப் புலப்படுத்தும். மற்று இவர் பிறந்த பதியிலுள்ள இறைவர் திருப்பெயர் நீலகண்டர்

என வழங்குவதால் அப்பெயர் இவருக்கு இடப் பெற்றது என்னலுமாம்.

இவரது பாடினியார் மதங்கசூளாமணியார் என்று கூறப்படுகின்றார். மதங்கர் என்பது பாண் குலத்தினரைக் குறிக்கும் வடமொழிப் பெயர். பாண் குலத்திற்குச் சூளாமணி போன்றவர் என்னும் பொரு ளுள்ள இப்பெயர் பின் வந்த சிறப்புப் பெயராதலும் கூடும். குழவிப் பெயராதற்கும் இழுக்கின்று.

## இசைப்புலமை

சம்பந்தர் திருப்பதிகங்களைப் பாணரும் பாடினியாரும் ஒருங்கு யாழிலிட்டுப் பாடினராகக் கூறுவதுடன், பாணரை 'ஏழிசையும் பணிகொண்ட நீலகண்ட யாழ்ப்பாணர்' என்றும், பாடினியாரை 'மன்னும் இசை வடிவான மதங்க சூளாமணியார்' என்றும் சேக்கிழார் பாராட்டுவது அவ் விருவரது இசையின் மேன்மையைத் தெரிவிப்பதாகும். மற்றும் ஞானசம்பந்தப் பெருமான்,

"பாணனிசை பத்திமையாற் பாடுதலும் பரிந்தளித்தான்"

எனத் திருக்கோளிலித் தேவாரத்தும்,

"தார முய்த்தது பாணற் கருளொடே"

எனத் திருவாலவாய்த் தேவாரத்தும் அருளிச் செய் தன பாணருடைய [1]இசைப் பெருமை, பத்தியின்

மேம்பாடு என்பவற்றையும், இறைவனது அருளா ரமுதத்திற்கு அவர் உரியரானமையையும் புலப் படுத்தா நிற்கும். சேக்கிழார் குரிசில்,

> "திருவிய மகத்தி னுள்ளுந் திருநீல கண்டப் பாணர்க்
> கருளிய திறமும் போற்றி"

எனப் பின்னதனைக் குறிப்பிடுதலும் ஈண்டு அறியற் பாலது. தாரம் என்னுஞ் சொல் 'அரும்பொருள்' என்னும் பொருளில் சங்கச் செய்யுட்களில் பயின் றுளது. ஈண்டு அரிதாய பொற்பலகையை அது குறிப்பது போலும். அதற்குப் பிறவாறு பொருள் கூறுவாருமுளர்.

இனி, சம்பந்தர் ஈரிடத்தும் குறித்த பாணர் * பாணபத்திரராவர் என்பது ஓர் அறிஞரின் கருத்து.

## யாழ் முரி.

'மாதர் மடப்பிடி' என்னும் பதிகம் பாணரது யாழிலடங்காமையும், பாணர் யாழினை முரிக்கத் தொடங்கிய பொழுது சம்பந்தர் தடுத்து நிறுத்தின மையும் புராணத்திற் கூறப்பட்டன. சிலர் யாழ் முரி படாமையின் பதிகத்திற்கு 'யாழ் முரி' என்னும் பெயர் பொருந்தாதெனக் கருதி, 'யாழ் மூரி', என் றெழுதி யுள்ளனர். ஆயின், **நம்பியாண்டார் நம்பிகள்,**

---

* **'மாணிக்கவாசகர் வரலாறும் காலமும்' என்னும் நூலில் மாணிக்க வாசகர் காலம் (பக்கம் 24-42) என்னும் பகுதியில் இது விரி வாக ஆராயப்பெற்றுளது.**

ஆளுடைய பிள்ளையார் திருவுலாமாலை, திருக்கலம்பகம், திருத்தொகை என்பவற்றில் முறையே 'யாழை முரித்தும்', 'யாழ் முரிய', 'பாணர் யாழை முரித்தான்' என்று கூறியிருத்தலின் அது பொருந்தா தென்க. நம்பிகள் பிள்ளையார் திருவந்தாதியில் "உடைத்தது பாணன்றன் யாழின் ஒலியை' என்றும் கூறியிருத்தலின், யாழ் முரி என்பதற்கு யாழின் ஒலியைக் கெடுத்தது என்று பொருள் கொள்ளுதல் பொருத்தமாம்.

## காலம்.

நீலகண்ட யாழ்ப்பாணர் ஆளுடைய பிள்ளையார் காலத்தில் இருந்தவராகலானும், பிள்ளையார் நிலவுலகிலே வாதாபி கொண்ட நரசிங்கவன்மன் என்னும் பல்லவ மன்னன் காலத்தில் கி. பி. ஏழாம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் விளங்கினவரெனத் துணியப்படுதலானும் இவர் காலமும் அதுவே யாதல் பெற்றாம்.

## இடம்.

பெரும்பாணர் பிறந்த திரு எருக்கத்தம்புலியூர் என்பது நடு நாட்டிலுள்ள தேவாரப் பாடல் பெற்ற திருப்பதிகளி லொன்று; விருத்தாசலத்திற்குத் தெற்கே ஏழு நாழிகை வழியளவில் உள்ளது. எருக்கினைத் தல விருக்கமாக வுடைய புலியூர் என்பது இதன் பொருள். புலியூர் என்னும் பெயருடைய

பதிகள் பலவாகும். அத்தம் என்பது காடு என்னும் பொருளுடையதென்றல் பொருந்தும். இப்பதி இப்பொழுது இராசேந்திர பட்டினம் என்னும் பெயரால் வழங்குகிறது.

சேக்கிழார் பெருமான் இவ்வூரை இன்ன நாட்டினது என்று குறிப்பிடாமல், யாழ்ப்பாணர் புராணத்தில் 'எருக்கத்தம்புலியூர் மன்னி வாழ்பவர்' என்று மட்டும் கூறியிருப்பது சோழநாட்டின் வடவெல்லையை ஒட்டியுள்ள இப்பதி அக்காலத்தில் இந்நாட்டது எனத் துணிதற் கரிதாயினமை கருதியோ என ஐயப்பாடு நிகழ்கின்றது. இவ்வாறே அதற்கணிமையிலுள்ள பெண்ணாகடத்தையும், இருக்கு வேளூரையும் முறையே கலிக்கம்பர் புராணத்தும், கணம் புல்லர் புராணத்தும் நாட்டின் பெயர் குறிப்பிடாமற் கூறியிருப்பதும், பின்னதனை 'வடவெள்ளாற்றுத் தென் கரைப்பால்' உள்ளதாக மட்டும் சுட்டியிருப்பதும் ஈண்டு அறியற்பாலன.

பாணரது திருத் தாயார் பிறந்தவூராகிய தருமபுரம் என்பது தேவாரப் பாடல் பெற்ற சோணாட்டுத் திருப்பதிகளில் ஒன்று; காரைக்காலுக்கு ஒரு நாழிகை வழியளவில் உள்ளது. தருமராசன் (இயமன்) பூசித்தமையின் இப்பெயர் பெற்றதென்பர்.

## குல நிலைமை.

யாழ்ப்பாணர் மதுரையை அடைந்து முதலில் இறைவனது கோயிலின் வாயிலில் நின்று பாடினார்.

என்பதும், அவர் திருவாரூரின் கண்ணும் அவ்வாறே கோயில் வாயிலில் நின்றுபாட, அவருக்கு வடதிசைக் கண் வேறு வாயில் வகுத்தளித்தமையால் அவ் வழியே புகுந்து வணங்கினர் என்பதும், அவர் காழிப் பதியை அடைந்த பொழுது சம்பந்தர் அவரைக் கோயிலின் புறமுன்றிற் கொண்டுசென்று கும்பிடு வித்தார் என்பதும், அவருக்கு உறைவிடம் அமைத்து விருந்தளித்தார் என்பதும், சாத்தமங்கை யென்னும் பதியில் நீலநக்கரை நோக்கி, 'நீலகண்டப் பெரும் பாணர் இன்று தங்குதற்கு இடங் கொடுப்பீராக' எனச் சம்பந்தர் கூறினர் என்பதும் ஆகிய இவற்ருல் அற்றை நாளிலே இக்குலத்தினர் திருக்கோயிலினுள் ளும், அந்தணர் மனையகத்தும் புகுதற் கியலாதவரா யிருந்தனரென்பது புலனாகின்றது.

## பெருமை

இவரது இசைப் பெருமையும், அன்பின் பெரு மையும் முன்பு உரைக்கப்பட்டன. திருவாலவா யுடைய முதல்வன் அடியார்கட்குக் கனவிலருளிச் செய்து இவரைத் திருக்கோயிலினுள்ளே தமது திரு முன்பழைத்து வரப் பணித்ததும், திருவாரூர்ப் பெரு மான் இவருக்கு வேறு வாயில் வகுத்துக் கொடுத்துக் காட்சி யளித்ததும், திருஞானசம்பந்தப் பெருமான் இவரையும் இவரது பன்னியாரையும் பிரியாது உட னிருக்கச் செய்து அளவளாவி வந்ததும் இவர்க ளுடைய சீலத்தையும், அன்பின் மேன்மையையும்

விளக்குவனவாகும். மற்றும் அந்தணராகிய நீலநக்கர் மனை நடுவண் தீவளர்க்கும் வேதியின் பாங்கர் இவர்கட்குத் துயில் புரியும் இடமளித்ததும், இவர்கள் சார்பாலே தீயானது வலஞ்சுழித் தோங்கியதும் இவர்களது செப்பரும் திப்பிய நிலையை உணர்த்துவனவாம். மற்றும், காழியர் தவப்பயனும் கவுணியர்கோன் பாணரை விளிக்கும் பொழுதெல்லாம் 'ஐயரே!' என விளித்தாராகவும், 'நீர் அவதரித்திட இப்பதி என்ன மாதவம் செய்ததோ' எனப் பாராட்டினாராகவும் தொண்டர்சீர்பரவுவார் கூறியன உளங்கொளற்பாலன. இவ்வாற்றால் உலக நிலையில் மக்களால் உண்டாய உயர்வு தாழ்வு வேற்றுமைகளைத் தகர்த்தெறிந்து யாவரையும் ஒருமைப் பாடுடைய உயரிய சம நிலையில் வைப்பது உண்மையாய சமய நெறியே என்பது இனிது விளங்குகின்றது.

## பாணரின் குடிவழியோர்.

மூவர் பாடிய தேவாரப் பதிகங்களனைத்தையும் நம்பியாண்டார் நம்பிகளின் துணைகொண்டு தில்லைப்பதியில் வெளிப்படுத்தித் திருமுறை வகுத்தருளிய முதலாம் இராசராச சோழ தேவர், தேவாரப் பதிகங்கட்கு இசை வகுக்கக் கருதி, நம்பியுடன் திருஎருக்கத்தம்புலியூரை யடைந்து திருக்கோயிலிற் புக்கு வணங்கி, 'எம்பெருமானே! இன்னிசை தந்தருள்வீர்' எனக் குறையிரந்து வேண்டினார் என்றும், மாதொரு பாகனுடைய பெருமான்,

"நல்லிசையாழ்ப் பாணனார் நன்மரபின் வழிவந்த
வல்லியொருத் திக்கிசைகள் வாய்ப்பவளித் தோமென்று
சொல்லவவள் தனையழைத்துச் சுருதிவழிப் பண் தழுவும்
நல்லிசையின் வழிகேட்டு நம்பியிறை யுண்மகிழ்ந்தார்"

என்றும்,

"ஆங்கவளை யம்பலத்து ளாடுவார் திருமுன்பே
பாங்கினுடன் கொடுவந்து பண்ணடைவு பயில்பாடல்
ஓங்கருளால் முறைபணித்தற் கொக்கும் என வோரோசை
நீங்கரிய வானின்கண் நிகழவர சன் கேட்டான்"

என்றும், அவ்வண்ணமே அவ்வம்மையால் திருவருட் டுணை கொண்டு தேவாரப் பதிகங்கட்கு இசை வகுத்துப் பண்ணடைவு செய்யப் பெற்ற தென்றும் திருமுறை கண்ட புராணம் என்னும் நூல் இயம்பு கின்றது. இசை வகுக்க எண்ணிய அரசர் எருக்கத் தம்புலியூரை அடைந்து இறைவனை வேண்டினார் என்பதும், இறைவன் அருளியபடி, யாழ்ப்பாணர் வழியில் வந்த மாதரார் ஒருவரால் இசை வகுக்கப் பட்டதென்பதும் அப்பதியும், பெரும்பாணர் வழி யினரும் தமிழிசைக்கே நிலைக்களனாக விளங்கின மையைப் புலப்படுத்துகின்றன.

---

# திருப்பாணாழ்வார்.

"காட்டவே கண்டபாத கமலநல் லாடையுந்தி
தேட்டரு முதரபந்தந் திருமார்பு கண்டஞ் செவ்வாய்
வாட்டமில் கண்கண்மேனி முனியேறித் தனிபுகுந்து
பாட்டினாற் கண்டுவாழும் பாணர்தாள் பரவினோமே"

—திருமலை நம்பிகள்.

## ஆழ்வார் தோற்றம்.

"பாடல்சால் சிறப்பிற் பரதத்து ஓங்கிய கோடாச் செங்கோற் சோழர்தங் குலக்கொடி" என்றும், "கோள்நிலை திரிந்து கோடை நீடினும் தான் நிலை திரியாத் தண்டமிழ்ப் பாவை" என்றும் நல்லிசைப் புலவர் பாராட்டுவதும், தன்கட் படிவோரைப் பிறவி வெள்ளத்திற் படியாதவாறு செய்யும் பெருமையுடையதுமாகிய காவிரித் திருநதி பொன்னும் மணியும் கொழித்து வந்து எஞ்ஞான்றும் வற்றுது பாய்ந்து வளம்படுக்கும் சோழ வள நாட்டிலே, சென்னி வேந்தர்கள் அரசு வீற்றிருக்கும் தலைநகரங்கள் ஐந்தனுள் ஒன்றுவதாய், முன்னர் முறஞ்செவி வாரணத்துடன் புறஞ்சிறை வாரணம் போர் புரிந்து வென்றதனாற் பெற்ற கோழி என்னும் பெயருடையதாய் "ஊரெனப்படுவது உறையூர்" என்று சிறப்பிக்கப்படுவதாய், தரும வருமன் என்னுஞ் செம்பியனுக்குப் புதல்வியாய் நீளாதேவி அவதரித்த

பெருமையினை யுடையதாய் விளங்காநின்ற உறந்தை யம்பதியிலே, கார்த்திகைத் திங்களின் உரோகிணி நாளிலே திருமாலினது திருமறுவின் அமிசராய் ஒருவர் ஓர் கழனியின்கண் நெற்பயிரிடமாக அவ தரித்துப் பொற்பதுமை போல் ஒளி வீசிக் கொண் டிருந்தார். அங்ஙனம் தோன்றி விளங்கிய அத் தெய்வக் குழவியை, அப்பொழுது அவ்வழியே தன் மனைவியுடன் போந்த பாணர் குலத்தினொருவன் பார்த்து வியந்து, மகப்பேறின்றி வருந்திய தமது வருத்தந்தீர இரு கையாலும் எடுத்து, வறியவன் வைப்புநிதி பெற்றாற்போல மகிழ்ந்து மனைவி கையிற் கொடுக்க, அவ்வம்மையும் ஆர்வம் விஞ்சி அங்கையிற் றாங்கி, மார்பிலணைத்து மகிழ்ந்தனள். பின் அவ்விருவ ரும் அக்குழவியை ஆவின்பால் முதலிய தூய உணவு களையே அளித்து வளர்த்து வந்தனர். அங்ஙனம் வளரப் பெற்ற இவர், செங்கணெடியோன் திருவரு ளால் உதித்தவராதலான் இயற்கையாகவே உலகப் பற்றுக்கள் அற்றவராய், தமது மனத்தினைத் திருமா லின் திருவடித் தாமரையில் தேன் நுகரும் வண் டாக்கி விளங்கினர். விளங்கின இவர் தாம் வளர்ந்த பாணர் மரபினுக்கு ஏற்ற யாழ்ப் பாடலில் வல்ல ராய்த் தேனினுமினிய யாழிசை பாடுந் திறத்தினால் **பாணர்** என்றே பெயர் கூறி அழைக்கப்பட்டனர்.

### இன்னிசைத் தொண்டு.

இளமையிலேயே நாரத முனிவரைப் போல ஞான வயிராக்கியங்களும், வீணை விற்பனமும்

முதிர்ந்து பொலிந்த இவருக்குத் திருவரங்க நாதன் ஒருநாள் மறைவில் எழுந்தருளித் திருவிலச்சினை யிட்டுச் சென்றருளினூர். அதனால் உலகளந்த பெரு மாளின் திருவடித் தொண்டிற்கு உரிமை யெய்தியவ ராகிய பாணர் திருவரங்கத்தில் எழுந்தருளியிருக்கும் பாம்பணை மேய பரமனுக்குப் பாடற் றிருத்தொண்டு புரிய வெண்ணினர். அதுகுறித்துப் புறப்பட்ட இன் னிசை வாணர், தாம் பாணர் குலத்து வளர்ந்தோராக லின் காவிரிக்கும் கொள்ளிடத்திற்கும் இடையே யுள்ள திருவரங்கத் திருப்பதியில் அடியிடுதற்குந் துணியாராய், தென்பாலுள்ள திருக் காவிரியின் தென் கரையிலே திருமுகத் துறைக்கு எதிராக நின்று, தெண்ணீர்ப் பொன்னி திரைக்கையால் அடிவருடப் பள்ளிகொள்ளும் கருமணியைத் திசை நோக்கித் தொழுது, யாழினை மார்பிற்றுங்கி நரம்பினை வருடி இசையை யெழுப்பி யாழிசையும் மிடற்றிசையும் ஒரு தன்மையாய் ஒன்றித் தோன்ற, கேட்போரின் மனமுஞ் செவியுங் குளிர, திருமால் திருவுள்ளம் உவப்ப, விஞ்சையர் முதலியோரும் வியப்பெய்த உள் கலந்து பாடிப் பரவினூர்.

முன்னர் முனிக்கிராமம் என்னும் ஊரிலே பாணர் குலத்துதித்து, அணிமையிலுள்ள திருக் குறுங்குடி என்னும் திருப்பதிக்கு நாடோறுஞ் சென்று, திருக்கோயிலின் மதிற்புறத்திருந்து, நம்பி யின் வடிவழகை நெஞ்சினிற் பாவனை செய்து, யாழிசை பாடி, தன்பால் அடைக்கலம் புக்க ஓர்

பிரம ராக்கதனுக்குத் தான் பாடிய பண்ணின் பயனையளித்து அவனது சாபத்தை நீக்கி நற்கதியிற் புகுத்தி, தானும் பிறவிப் பெருங்கடலைக் கடந்தோ ஞகிய நம்பாடுவானைப்போலவே, இப்பாணரும் அரங் கத்தம்மான்பாலுள்ள ஆரா அன்பினாலே உள்ளம் நெக்குருக, உடல் புளகிக்க, கண்கள் உவகை நீராகிய அருவியைச் சொரிய, நித்தலும் வைகறைப் பொழு திலே வந்து இன்னிசை யாழ் பாடி வந்தனர்.

## தீண்டாமையின் இன்னல்.

இன்னணம் பாணர் இசைப்பணியாற்றி வருங் காலத்து, ஒரு நாளில், திருவரங்கத்திற் பாடரவப் பள்ளிமேயாற்குத் திருமஞ்சனங் கொணரும் திருப் பணியினைச் செய்வோராகிய லோக சாரங்கர் என்ற முனிவர், பொற் குடத்துடன் பொன்னித் துறையை யெய்தினர். எய்திய முனிவர் தாம் தூநீர் முகக்குந் துறைக்கு அருகில் நின்று இசை பாடும் பாணரை நோக்கி அருவருத்து 'அகலச் செல்' எனப் பன்முறை பணிக்கவும், பாணர் இவ்வுலகத் தொடர்பினை மறந் திருந்தமையால் அம்மொழி செவியுறப் பெருமல் வாளாநின்றனர். அச்செய்தியைக் கேள்வியுற்ற இரு பிறப்பாளர் பலர் பாணர் அங்ஙனம் நிற்றல் கொண் டது விடாமை யாகிய அவரது மூர்க்க குணம் என நினைந்து அதனைக் குலைப்பேமெனத் துணிந்து, விரைந்து வந்து, 'இழிபிறப்பினேய்! அகலப்போ' எனப் பலமுறை வன்சொற் கூறி அகற்றவும், இசை

வாணர் அம்மொழிகள் செவியிற் படாமையால் தாம் நின்ற விடத்தினின்றும் சிறிதும் பெயராமல் இன்னிசை யாழ் பாடிக் கொண்டிருந்தனர். அதனைக் கண்ணுற்று, அவர்களிற் சிலர் வியந்து, இவன் கானயோகி போலும் எனக் கூறிச் சென்றனர். வன்னெஞ்சுடையரான மற்றும் சிலர் 'எப்படியும் இவனை இவ்விடம் விட்டுத் துரத்தாமல் விடுவதில்லை' எனச் சூளுறவு செய்து, பற்பல கற்களை யெடுத்து இவர் மீது இடைவிடாமல் எறிந்தனர். அவ்வலிய கற்கள் திருமகள் கேள்வன் திருவடிகளில் வைத்த அன்புருவாய பாணர்தம் மெல்லிய உடலின் மேல் நன்கு தாக்கவும், அன்பினால் மெய்ம்மறந்து நின்ற பாண் தலைவர் சிறிதும் பரிச வுணர்ச்சி யில்லாராய், இந்திரன் தன் ஊர்தியாகிய ஏழு முகில்களையுங் கொண்டு சோனை மாரியாக ஒரே காலத்திற் பெய்வித்த கன் மழைக்குச் சிறிதும் பின்னிடாத கோவர்த்தனம் என்னுங் குன்றைப் போலச் சிறிதுஞ் சலியாதிருந்தனர். கோவலன் குடையாகப் பிடித்த அம் மலையினிடம் தன் வலிமை செல்லாது அச்சமெய்தி நீங்கிய புரந்தரனைப் போலவே யாழ்வலான்பால் இடுக்கண் விளைத்த அனைவரும் அஞ்சி அகன்றனர். அப்பொழுது இவ்வன்பரது உடலிலும் உளத்திலும் சிறிதும் வருத்தங் காணப்படவில்லையாயினும், அடியார்களது அகத் தாமரையில் எழுந்தருளியிருக்கும் அரங்கநாதனது திருவுளம் மிகவுங் கலங்க, அப்பெருமான் திருநெற்றியிற் குருதி பெருகலுற்றது. அரவணைப் பெருமானை அருச்சிப்போர் அதனைக் கண்டு

மிகுந்த அச்சமெய்தித் திருக்கோயிற் காப்பாளர்கட்கு அறிவிக்க, அவர்கள் இவ்வுற்பாதச் செய்தியினை அரசன்பாற் சென்று உணர்த்தினர். மாதவன்பால் உற்ற இன்னல் கேட்ட மன்னவனும், மந்திரச் சுற்றத்துடன் பல்வகையாக ஆராய்ந்தும் காரணங் காணாது கவற்சி யெய்தி, திருவரங்கப் பெருமான் திருவடியிலேயே அப்பாரத்தை வைத்தனன்.

## இறைவன் அருளப்பாடு.

அதற்கு முன்லே ஒருநாள் மலர்மகள், மாயவனை நோக்கி, 'எம்பெருமானே! நெடு நாட்களாக நம்மை இடைவிடாமல் இசை பாடி வழிபட்டுவரும் நம் பாணர் இன்னமும் புறம்பே நிற்கற்பாலரோ?' என விண்ணப்பித்தருள, பெருமானும் உவந்த உள்ளத்தராய், 'அவ்வடியவரை விரைவில் அருகழைப்பேம்' எனக் கூறி, திருமகளின் திருவுள்ளக் கருத்தை நிறைவேற்றவும், தம்மை அடைவதற்குச் சாதனமாகவுள்ளது உண்மையன்பே என்பதனையும், பாணரது ஒப்பற்ற அன்பின் பெருமையையும் உலகினர்க்கு எடுத்துக் காட்டவும், மன்னவனுடைய வளவனது உள்ளக் கவலையை ஒழித்தருளவும் திருவுளங்கொண்டு, லோக சாரங்க முனிவர் என்னும் ஜீயரது கனவின் கண் தோன்றி, 'நமக்குச் சிறந்த அன்பரான பாண் பெருமாளை நீர் நெகிழ நினைத்து நம்முடைய திருமேனியை நோகச் செய்வது தகுதியோ? அவரை நுமது தோளிலேற்றிக்கொண்டு நம் பக்கலில் கடுகக் கொண்டு வருவீர்' எனப் பணித்தனர்.

## பாணர் முனிவர் தோளில் எழுந்தருளியது.

முனிவரர் விடியற் காலையில் கண் விழித்த வுடனே, கனவில் மணிவண்ணன் உரைத்தருளிய மாற்றத்தை நினைந்து வியப்பெய்தி, அக்கடவு ளாணையின்படியே செய்து தாம் பேறுபெற எண்ணி, அச்செய்தியைத் திருவரங்கத்திலுள்ளார் அனைவர்க் கும் அறிவித்து, அவர்களும் உடன் வரச் சென்று திருக்காவிரியை அடைந்து திருமுகத் துறையிலே நீராடிச் செய்கடன் முடித்துக்கொண்டு, அரங்கத்தை நோக்கிச் சேவித்துக் கானஞ் செய்து கொண்டு சேய்மையில் நிற்கும் ஆழ்வாரிடத்தேற விருப்போ டெழுந்தருளி, அவர் திருவடிகளிலே தாளும் தடக் கையும் கூப்பிப் பணிந்து, 'தேவரீரைத் தம்மிடத் துக்கு எழுந்தருளுவித்துக்கொண்டு வருமாறு நம் பெருமாள் அடியேனுக்கு ஆணையிட்டருளினுர்' என்று கூற, யாழ்த் தலைவர், 'புலைமகனுன அடியேன் திருவரங்கப் பெருநகரை மிதித்திடுந் தகுதியுடை யேனே' என்று கூறி மறுத்தனர். அம்மொழி கேட்ட முனிவர் தலைவர், 'தேவரீர் அதனை மிதித்திட வேண்டா; பெருமாள் பெரிய திருவடியின் திருத் தோளில் எழுந்தருளுதல் போல அடிகள் அடியேனது தோளின்மீது ஏறியருளும்' என வேண்டினர். அதனைக் கேட்டவளவிலே பாணர் தலைவர் அள விறந்த அச்சங் கொண்டு, உடல் நடுங்கி, உரை தடுமாறி, 'தூய மெய்த்தவ முனிவரராகிய தேவரீர்

அடியேன் திறத்து இன்னணங் கூறுதல் ஒவ்வாது; பாகவதர்களின் திருவடிகட்குத் தலையைத் தவிசாக்கு தற்கு உரியனாகிய யானோ இக்கொடுந் தொழில் புரிவேன்? இதற் குடன்பட்டு நெடுமாலடியார்களை அவமதித்தலாய தீவினையை அடைதலினும் எரிவாய் நிரயத்தின்கண் அழுந்துவது நலமன்றோ' என்று நல்லுரை பல வழங்கினார். அதன் பின்னர் முனிவர் பெருமான் அரங்கநாதரது அருளப் பாட்டினை விண்ணப்பஞ் செய்து, அப்பணி கடத்தற்குரியதன்று என்பதை எடுத்துரைத்து, எப்படியும் அதற்கிசைய வேண்டுமென வேண்டினார். பெருமானின் அருளப்பாடிது வென்பது கேட்ட இசைப் பாணர், யாதும் மாறு கூற மாட்டாராய், கூப்பிய கையுடன், அரவணையிற்றுயிலும் அரங்கப் பெருமாளுக்கே தம்மை உரியராக்கிச் செயலற்று நின்றனர். பின்னர் அருந்தவர், ஆராத அன்பினாலே இன்னிசை பாடிக் கோவிந்தனது திருவுள்ளத்தைக் கொள்ளை கொண்டவராகிய பாண் பெருமானைத் தோளின்மேலேற்றிக் கொண்டு சென்று, அழகிய மணவாளன் திருமண்டபத்தருகே இறக்கியிட்டனர்.

## பாணர் வீடுபெற்றது.

அப்பொழுது, பெரிய பெருமாள் வறியனுக்கு நிதிக்குவை காட்டுவார் போலத் தமது திப்பிய மங்கள வடிவை இவருக்குக் காட்டியருள, **முனியேறும் பெருமாள்** அணியரங்கனது எழில் மிகுந்த

தெய்வப் படிமையைத் திருவடிகளிலிருந்து திருமுடியளவுங் கண் களிகூரக் கண்டு வணங்கி, பேருவகையடைந்து, அத்திருவுருவத்தின் அழகை ஆழ்ந்த உள்ளமுடையராய் அனுபவித்தனர். அங்ஙனம் தாம் அனுபவித்த திறத்தை உலகின்கண் ஏனையோரும் உணர்ந்து உய்திபெறும்பொருட்டு 'அமலனாதிபிரான்' என்னும் பத்துப் பாட்டுடைய பிரபந்தத்தை அருளிச் செய்தார். அதில், முதற்கண்,

"அமல னாதிபிரா னடியார்க்கென்னை யாட்படுத்த
விமலன் விண்ணவர்கோன் விரையார்பொழில் வேங்கடவன்
நிமலன் நின்மலன் நீதிவானவன் நீள்மதி ளரங்கத்தம்மான்
கமலபாதம் வந்தென் கண்ணினுள்ளன வொக்கின்றதே"

என, இறைவனை அடைவதற்கு உபாயமாகவுள்ள திருவடியைத் தாம் பற்றி நிற்குமாறு அருளிச்செய்து, அடுத்துவரும் பாட்டுக்களில் அவருடைய பொன்னுடை, திருவுந்தி, உதரபந்தம், திருமார்பு, திருமிடறு, திருவாய், திருக்கண், திருமேனி என்பவற்றிலுள்ள ஈடுபாட்டை முறையே உரைத்துவந்து, இறுதியிலே,

"கொண்டல் வண்ணனைக் கோவலனாய் வெண்ணெய்
உண்ட வாயனென் னுள்ளங் கவர்ந்தானை
அண்டர் கோனணி யரங்கனென் னமுதினைக்
கண்ட கண்கள்மற் றொன் றினைக் காணாவே"

என்று தமது துணிபை வெளியிட்டு வையகத்தோரை வாழ்வித்து, அளவற்ற பெருமகிழ்ச்சியுடன் நிற்கும் பொழுது, திருவரங்கப்பெருமான் அவரை அத்திரு

மேனியோடு ஏற்றருள, தூய திருத்தொண்டராய திருப்பாணாழ்வார், அனைவரும் காண, நெடுமால் திருவடிகளிலே காய்ந்த இரும்புண்ட நீர்போல் இரண்டறக் கலந்தருளினார்.

அருந்தவ முனிவராகிய லோகசாரங்கர் முதலிய பலர் இப்பாணர் பெருமானை வழிபட்டு நற்கதி பெற்றனர் என்பர்.

"காண்பனவு முரைப்பனவு மற்றொன் றின்றிக்
கண்ணனையே கண்டுரைத்த கடிய காதற்
பாண்பெருமா னருள்செய்த பாடல் பத்தும்
பழமறையின் பொருளென்று பரவு மின்கள்."



# ஆராய்ச்சிக் குறிப்பு.

## காலம்.

திருப்பாணாழ்வார் தமிழ் நாட்டிலே அவதரித்துத் திருமால் பத்தியிற் சிறந்து திவ்வியப் பிரபந்தங்கள் அருளிச்செய்த தவஞானச் செல்வர்களாகிய ஆழ்வார்கள் பன்னிருவருள் ஒருவர். ஆழ்வார்களின் வரலாறுகள் **திவ்யசூரிசரிதை, குருபரம்பரை, ஆழ்வார்கள் வைபவம், உபதேச ரத்தினமாலை** முதலிய பல நூல்களிற் கூறப்பட்டுள்ளன. ஆழ்வார்களை வரிசைப்படுத்துரைப்பதில் அவை ஒவ்வொன்றும் வேறுபடுதலின் அவை கொண்டு அவர்கள் காலத்தின் முற் பிற் பாட்டினை அறியக்கூடவில்லை.

"பொய்கைமுனி பூதத்தார் பேயாழ் வார்தண்
பொருநைவரும் குருகேசன் விட்டு சித்தன்
துய்யகுல சேகரனம் பாண நாதன்
தொண்டரடிப் பொடிமழிசை வந்த சோதி
வையமெலா மறைவிளங்க வாள்வே லேந்து
மங்கையர்கோ னென்றிவர்கள் மகிழ்ந்து பாடும்
செய்யதமிழ் மாலைகளுந் தெளிய வோதித்
தெளியாத மறைநிலங்கள் தெளிகின் றோமே"

என்பது வேதாந்த தேசிகர் அருளிய **அதிகார சங்கிரகம்** என்னும் நூலிலுள்ளது. இதில் விட்டு சித்தர் என்னும் பெரியாழ்வாரைக் கூறியவழி, அவர்

புதல்வியாகிய ஆண்டாளையும் கூறியதாகக் கொள்ள வேண்டும். மதுரகவியை அடுத்த பாட்டிலே சொல்லி யுள்ளார். இவரே பிரபந்தசார முறையில் இதற்கு வேருய முறையும் கூறியுள்ளார். இனி, மணவாள மாமுனிகள் அருளிச் செய்த உபதேச ரத்தின மாலையில்,

"பொய்கையார் பூதத்தார் பேயார் புகழ்மழிசை
ஐய னருள்மாறன் சேரலர்கோன—துய்யபட்ட
நாதனன்பர் தாட்டுளி நற்பாணன் நற்கலியன்
ஈதிவர்தோற் றத்தடைவா மிங்கு"

என வேறு முறை கூறப்பட்டுளது. மற்றும், திரு வரங்கத் தமுதனார், பராசர பட்டர் முதலாயினர் கொண்ட முறைகளும், நாலாயிரப் பிரபந்தத்தில் பாசுரங்கள் அமைக்கப்பட்டுள்ள முறையும் வேறு வேறாம். ஆனல், ஈண்டுக் காட்டிய மாலைச் செய்யுளில் 'ஈது இவர் தோற்றத்து அடைவாம்' எனத் துணிபுறக் கூறி யிருத்தலானும், தேசிகரது பிரபந்த சாரத்திற் கூறிய முறை இதனேடு ஒத்திருத்தலானும் இதனையே காலம் பற்றிய முறையெனக் கொள்ளுதல் பொருத்தமாகும். குரு பரம்பரையில் முதல் நால்வரும் துவாபர யுகத்திலும், நம்மாழ்வார் கலியின் முதல் ஆண்டிலும், ஏனையோர் அதற்குப் பின்னரும் தோன்றினராகக் கூறியிருத்தலும் அறியற்பாலது. மாலைச் செய்யுளில் மாறனை யடுத்து மதுர கவியையும், பட்ட நாதனை யடுத்து ஆண்டாளையும் சேர்த்து முறைப்படுத்த வேண்டும்.

திருப்பாணாழ்வார் கலியுகம் 343-வது துன்மதி யாண்டு, கார்த்திகைத் திங்கள், ஐந்தாம் நாள் ஆகிய அபர பக்கம் - துதியை, புதன்கிழமை, உரோகிணி நட்சத்திரம் கூடிய நாளில் உதித்தாராகக் குரு பரம்பரை கூறுகின்றது. ஆண்டுகளின் பெயர் முதலியன பிற்காலத்தில் உண்டானவை என்பது ஆராய்ச்சி வல்லார் துணிபு. துவாபர யுக இறுதியும், கலியுகத் தொடக்கமுமாக ஆழ்வார்கட்குக் கூறப்பட்டிருக்கும் காலத்தை இற்றைநாள் வரலாற்று ஆசிரியர்களாவது, ஆராய்ச்சியிற் சிறந்த புலவர்களாவது ஒத்துக் கொள்வதில்லை. ராவ்சாகிப் திரு. மு. இராகவையங்கார் அவர்களே "**செந்தமிழ்**" வெளியீட்டிலும், "**ஆழ்வார்கள் காலநிலை**" என்ற நூலிலும் பழைய கொள்கைகளைத் தள்ளிவிட்டு, ஆராய்ச்சி முறையில் ஆழ்வார்கள் விளங்கிய காலங்களை அறுதியிட முயன்றுள்ளார்கள். ஆயின், இவ்வாராய்ச்சியை மேற்கொண்ட பலரும் ஒரே வகையான முடிபுக்கு வாராமல் ஒருவரோடொருவர் முரணிக் கூறுதலின் புதிய ஆராய்ச்சியானும் ஆழ்வார்கள் காலம் ஒருதலையாக வரையறுக்கப்படவில்லை யென்றே கொள்ளுதல் வேண்டும். ஆதலின் இப்பொழுதுள்ள நிலைமையில், திருப்பாணாழ்வார் கி. பி. எட்டாம் நூற்றுண்டிலோ, ஒன்பதாம் நூற்றுண்டிலோ விளங்கினாராவர் எனக் கூறுதலே சாலும்.

இனி, ஆழ்வார்கள் ஒவ்வொருவரும் தோன்றிய ஆண்டுகள் இவையெனத் துணிய வியலாவிடினும்,

அவர்கள் பிறந்த திங்களும், நாளும் திவ்வியசூரி சரிதை, உபதேச ரத்தினமாலை முதலியவற்றில் ஒரு பெற்றியே கூறப்பட்டிருத்தலின், அவை தவறு எனச் சாதிக்கும் சான்று இல்வழி, அவற்றை உண்மையெனக் கோடலே முறையாகும். மாலையில், திங்களும் நாளுமன்றி, அவர்கள் பிறந்த ஊர்களும் சொல்லப் பட்டுள்ளன. ஊர்பற்றியும் பிறழ்ச்சிக்கு இடனில்லை. பாணர் பிறந்த திங்கள், நாள், ஊர் என்பன உபதேசரத்தினமாலையிற் பின் வருமாறு கூறப்பட்டுள்ளன :—

"கார்த்திகையில் ரோகிணிநாள் காண்மினின்று காசினியீர்
வாய்த்த புகழ்ப்பாணர் வந்துதிப்பால்—ஆத்தியர்கள்
அன்புடனே தானமல னாதிபிரான் கற்றதற்பின்
நன்குடனே கொண்டாடும் நாள்"

"ஓங்குமுறை யூர்பாண னூர்"

## இடமும் குலமும்.

பாணரது ஊர் உறையூர் என்பது மேலே பெறப்பட்டது. ஆயின், உறையூரில் ஓர் கழனியில் நெற் கதிரிடமாகப் பிறந்தா ரென்பதும், அவ்வழிப் போந்த பாணர் குலத்தா ரொருவர் அக்குழவியைக் கண்டெடுத்து வளர்த்து வந்தாரென்பதும் புனைந் துரையே யாகும். திருமாலே சடகோபராய் வந்தார் என்று சொல்லக்கூடிய பெருமையுடைய ஆழ்வாரே உடைய நங்கையார் கருவிலிருந்து தோன்றினாராக, ஏனோர் சிலரைத் தாய் வயிற்றிருந்து பிறவாதவராகக்

கூறுவது என்னையோ? அங்ஙனம் கூறுதற்கு அவர்கள் வாய்மொழியாகிய அகச் சான்றோ, அல்லது உறுதியுடைய பிறசான்றுகளோ யாவையுள? பத்தி ஞானங்களில் மேம்பட்ட பெரியாரொருவர் இக்குலத்திலே பிறந்தாரென்னும் பெருமை பாணர் குலத்திற்கு எய்தாவாறு தடுக்கும் இப்புனைந்துரையைக் கழித்து, பாணர் குலத்திற் பிறந்தாராகவே நாம் கொள்ளுதல் முறையாகும்.

## பிரபந்தம்.

திருப்பாணாழ்வார் அருளிச்செய்தவை பத்துப் பாட்டுக்களே; முதற் பாட்டு 'அமலனாதிபிரான்' என்று தொடங்குதலின், அதுவே இப் பிரபந்தத்திற்குப் பெயராயிற்று. இதிலிருந்து பாணர் இசைப் புலமையே யன்றி, இயற்றமிழ்ப் புலமையும் உடையாரென்பது போதரும். சிலவாகிய இப் பாசுரங்களிலிருந்தே திருமாலின் திருமேனியழகில் இவர் எங்ஙனம் ஈடுபட்டிருந்தாரென்பதும், இவரது அன்பு மிகுதியும், மெய்ந்நூற் றுணிபும் புலனாகும். இவர் "அரங்கத்தம்மான், கமலபாதம் வந்தென் கண்ணினுள்ளன வொக்கின்றதே" என்று முதற்கண் திருவடியைப் பற்றி நின்று, பின் ஏனைய உறுப்புக்களின் அழகிலும் ஈடுபடுவது போன்றே, பெரியாழ்வாரும் ஈடுபடுதல் அவரது திருமொழியால் அறியப்படும்.

*"முத்தும் மணியும் வயிரமும் நன்பொன்னும்
தத்திப் பதித்துத் தலைப்பெய்தாற் போல் எங்கும்
பத்து விரலும் மணிவண்ணன் பாதங்கள்
ஒத்திட்டிருந்தவா காணீரே ஒண்ணுதலீர் வந்து காணீரே"*

என்பது பெரியாழ்வார் திருமொழி.

சைவ சமயகுரவராகிய திருநாவுக்கரசர் கோயிற் றிருவிருத்தத்தில் இவ்வாறு இறைவன் வடிவழகில் ஈடுபட்டுப் பாடியிருப்பதனையும் ஈண்டுச் சிந்தித்தல் பொருந்தும். அவர் திருவடியைக் கூறுவது,

*"பொருவிடை யொன்றுடைப் புண்ணிய மூர்த்தி புலியதளன்
உருவுடை யம்மலை மங்கை மணாள னுலகுக்கெல்லாம்
திருவுடை யந்தணர் வாழ்கின்ற தில்லைச்சிற் றம்பலவன்
திருவடி யைக்கண்ட கண்கொண்டு மற்றினிக் காண்பதென்னே"*

என்பது.

*"பாண்பெருமா ளருள்செய்த பாடல் பத்தும்
பழமறையின் பொருளென்று பரவு மின்கள்"*

என்று அன்பரொருவர் கூறுவது பாணருடைய பாசுரங்களின் மேன்மையைத் தெரிவிப்பதாகும். திருவரங்கத்தமுதனார் அருளிச் செய்த இராமாநுச நூற்றந்தாதியில்,

*"சீரிய நான்மறைச் செம்பொருள் செந்தமி ழாலளித்த
பாரிய லும்புகழ்ப் பாண்பெரு மாள்சர ணாம்பதுமத்
தாரியல் சென்னி யிராமா நுசன்றன்னைச் சார்ந்தவர்தம்
காரிய வண்மையென் னாற்சொல்லொ ணாதிக் கடலிடத்தே"*

3084



என, பாணருடைய பாசுரங்கள் நான்மறையின் செம் பொருளைக் கூறுவன வென்றும், அவருடைய திரு வடிக் கமலங்களை இராமாநுசர் முடியிலே தரித்துள்ளா ரென்றும் கூறியிருப்பது பாணரது ஒப்பற்ற பெருமைக்குச் சான்றும்.

"உம்பர்தொழு மெய்ஞ்ஞானத் துறையூரான் வாழியே
உரோகிணிநாள் கார்த்திகையி லுதித்தவள்ளல் வாழியே
வம்பவிழ்தார் முனிதோளில் வந்தபிரான் வாழியே
மலர்க்கண்ணை வேறொன்றில் வையாதான் வாழியே
அம்புவியில் மதிளரங்க ரகம்புகுந்தான் வாழியே
அமலனாதி பிரான்பத்து மருளினான் வாழியே
செம்பொனடி முடியளவுஞ் சேவிப்போன் வாழியே
திருப்பாணன் பொற்பதங்கள் செகதலத்தில் வாழியே."



# பாணபத்திரர்

---

## வடதிசைப் பாணன் வருகை.

திரிபுர மெரித்த விரிசடைக் கடவுளும், உலகெலாம் ஈன்ற உமையம்மையும், குன்ற மெறிந்த குமர வேளும் அரசு வீற்றிருந்த செந்தமிழ்ப் பாண்டி நாட்டிலே, பீடுமிக்க மாடமதுரையில் **வரகுண பாண்டியன்** என்னும் மன்னர் பெருமான் அரியணை யேறிச் சைவ நெறி தழைக்கவும், தண்டமிழ் சிறக்கவும் அறநெறி திறம்பாமல் அரசு புரியும் காலத்து, அவனது அவைக் களப் பாணராய்ச் சோமசுந்தரப் பெருமான் மீது அளவற்ற பேரன்புடையராய் விளங்கியவர் **பாண பத்திரர்.** அந்நாளில் வடநாட்டிலிருந்து **ஏமநாதன்** எனப் பெயரிய யாழ்ப்பாணன் ஒருவன் வென்றி விருதுகளுடன் தென்புலம் போந்து மதுரை சார்ந் தனன். அன்னவன், தென்னவன் கோயில் புக்கு, அரசவை எய்தி, மன்னவனை வணங்கித் தொழுது, அவன் புகழ்களை எடுத்துக் கூறி, ஏழிசைகளையுடைய இனிய யாழை இடப்பக்கத்தே தழுவிச் சுருதி கூட்டி, இன்னிசையாகிய தேனை அரசனது செவியாகிய வாய் நிறையுமாறு பெய்தனன். பாண்டியனும் அவ்வின் னிசை கேட்டு, அழகிய மலர்மாலை சூட்டப்பெற்ற முடியணிந்த தலையை அசைத்து மகிழ்ந்து, அவற்குப் பற்பல ஆடைகளையும், பகலவன்போல் ஒளிவிளங்கும்

மணிக் கலன்களையும், உணவுக்கு வேண்டிய பல பொருள்களையும் அளித்து, அவன் உறைதற்கு அகலிய மனை யொன்றும் காட்டி வரிசை செய்தனன். செய்யவும், பெருங் களிப்புடன் மனையை யெய்திய இசை வல்லானாகிய ஏமநாதன் மீனவன் வரிசை பெற்ற மேன்மையாலும், ஏனைய மன்னர்களிடம் பெற்ற விருதுகளினாலும் பெருமிதங்கொண்டு, தன்னோடு இன்னிசை பாடவல்ல யாழ்ப்புலவர் ஈண்டு வேறு ஒருவரும் இல்லை என்று தருக்குற்றிருந்தனன். அதனைத் தென்புலங் காவலன் ஓர்ந்து, ஏவலாளர்களை விளித்து, நமது பாணபத்திரனை அழைத்து வாரீர் எனப் பணித்தனன். உழையரால் அழைத்து வரப்பெற்ற பாணபத்திரன் மன்னவன் அடிபணிந்து அருகுநிற்ப, தென்னவன் அவனை நோக்கி, 'பாடுதல் பயின்ற இசை வல்லானாகிய ஏமநாதனோடும் நீ பாடவல்லையோ?' என வினவினன். இன்னிசை யாழை இடத்தோளின்கண் இட்டுள்ள பாணர் தலைவன் அரசனை வணக்கஞ் செய்து கூறுகின்றான்: 'செழியர் பெரும! அடியேன் நினது திருவுளத்தின் வலிமையும், கூடன் முதல்வனாகிய சொக்கலிங்கப் பெருமான் திருவருளும் கூட்டும் முயற்சியின் திறத்தாற் பாடி, ஏமநாதனின் விருதினை வாங்கி அவன் தருக்கினையும் ஒழிப்பேன்' என்றனன். வரகுணன் அதுகேட்டு, அங்ஙனமாயின் இன்றுபோய் நாளை வந்து பாடுவாயாக என வரைந்து கூறினான்.

### பாணபத்திரர் இறைவனை வேண்டுதல்.

அரசன்பால் விடைபெற்றுப் பத்திரன் தனதில்லத்திற் சென்றிருந்த பொழுது, வடபுலப் பாண்

மகன்பால் இசை பயிலும் மாணவர் பலர், வளம் நிறைந்த ஆவணங்களிலும், கவர்வழிகளிலும், மன்றங் களிலும், பொன்மலையனைய மாடங்கள் செறிந்த வீதி களிலும் சென்று சென்று, இசை மாத்திரை குன்றுத வாறு பாடிப் பெருமிதந் தோன்ற உலாவினர். வீணை யில் வல்ல பாணபத்திரன் அவ்வின்னிசைகளைக் கேட்டு, நன்று! நன்று! என வியந்து, இசை வல்லோ னுகிய ஏமநாதனிடம் கற்கும் மாணவர் பாடும் இசை யியல்பு இதுவாயின், அந்த இசைவலான் பாடும் முறைமை எத்தகைத்தோ? ஆ கெட்டேன்! நான் நாளைச் செவ்விய இசையைப் பாடி அவனை வெல்வது எங்ஙனமென்று கருதினுன். கருதி, கூடன் மேவிய குழகன் திருவடிகளை வந்தித்து, 'ஐயனே! இப் பொழுது அடியேற்கு நினதுதிருவருளாகிய துணையை அளித்தல் வேண்டும்' என வேண்டி, மனையை அடைந்து அதுபற்றிக் கவற்சியின்றி இருந்தனன்.

## இறைவன் விறகு சுமந்து வந்தது.

பாணபத்திரன் இவ்வாறிருப்ப, அடியார்க்கு எளியராம் ஆலவாயண்ணல், வருத்தத்துடன் வந்து தம்மைக் குறையிரந்த பத்திரனது பகைவனுகிய இசைவலானை ஓட்டும்பொருட்டு, முதுமையுற்ற ஒரு விறகு வெட்டியைப் போலத் திருமேனி கொள்வா ராயினர். அழுக்கு நிறைந்த கிழிந்த ஆடையை உடுத்தி, சடையின்கணிருந்து அமுதினை ஒழுகவிடும் வெள்ளிய திங்களையே வாங்கி இடையிற் செருகியது போல மழுங்கிய வெள் வாயினையுடைய அரிவாளை

வலப்புறத்து இடையிற் செருகி, இழுத்துத் தேய்ந்த செருப்பின் மீது அருமறை முடியைக் கடந்த திரு வடிகளை ஏற்றி, பழையதாய்த் தைக்கப்பட்ட பத் தரை யுடையதோர் யாழினைத் தோளினிடத்தே தரித்து, பிடரியிற் சென்று அசைந்து ஊசலாடும் ஒள்ளிய குண்டலமணிந்த திருச்செவியில் களாவினது சிறிய காய்களையுடைய நறிய கொத்தினைத் தொங்க விட்டு, தழைத்து நீண்ட சிகை சரியச் சும்மாடு தாங்கி, தறித்த விறகினைத் தினந்தோறுந் தாங்குதலான் மயிர் கழிந்து தேய்ந்து பள்ளமாகிய தலையினை யுடையராய், கங்கை நங்கையும் பங்குறை மங்கையும் காணுமல் வெட்டிய விறகின் சுமையைத் திருமுடியின் மீது ஏற்றி, என்புகள் வெளிப்படுமாறு தசை சிறிதும் இன்றி இளைத்த யாக்கையினை யுடையராய், கண்டவர் அன்புமிக்கு மனங்கனிந்து இரங்க, மனமொழிகளைக் கடந்த திருவடித் தாமரைகளை நிலமகள் முற்செய்த நல்வினையால் முடிமீது சூட, திருமுகத்திலே வேர்வை அரும்பவும், திருவாய் குவிந்து ஒலி செய்யவும் வாரா நிற்பர்; சுமை தாங்கிகளில் சுமையைச் சார்த்துவர், மடுவிலுள்ள நீரைப் பருகுவர்; பின் சுமையைத் தலை மீது எடுத்து வைப்பர்; தலையில் வெம்மையும் வேர்வும் நீங்குமாறு இரண்டு கைகளினுலும் சுமையை அடிக் கடி எடுத்து ஏந்துவர்; இவ்வாறு சென்று ஊரின்கட் புகுந்து, வாங்குவோர்க்கு மிகுந்த விலையைக் கூறி, மாட வீதிகளையும், கவர் வழிகளையும், குறுந் தெருக் களையும் கடந்து சென்று, பகற் பொழுது கழிந்த வெல்லையில், அந்த ஏமநாதனது கடைவாயிலின்கட் சென்றுர்.

## மாலையின் தோற்றம்.

அப்பொழுது தம் இன்னுயிர்த் தலைவரது வருகையை நோக்கி அழைப்பவர் போல ஆம்பல் வாய் மலர, இரவினைத் தோற்றுவித்து வெண்டிங்கள் புன்முறுவல் செய்து எழ, உயிர்த்துணைவரின் பிரிவினைக் கண்ட கற்புடை மகளிர் கண்ணீர் உகுத்து முகம் வாடுதல் போலத் தேனுகிய நீர் பெருகுகின்ற தாமரையின் வரிசைகள் கூம்பிட ஞாயிறு மேலைக் கடலில் நீந்திச் சென்றனன்; செல்ல, பறவைச் சேவல்கள் தம் வாய்திறந்து ஒலி செய்யாமல், தம் அருகணையும் பார்ப்பினையும் பெடையையும் சிறகரால் அணைத்துச் சோலைகளில் உள்ள தம் கூடுகளில் அடங்கவும், தேனுண்ட பெண் வண்டின் வாயிலுள்ள நறவினை ஆண் வண்டு பருகி, ஓடைகளிலுள்ள தாமரைச் சேக்கைகளிற் புக்கு உறங்கவும், புல்லென்னுந் தன்மையுடைய குரங்கின் கூட்டம் பொழிலூடு சென்று துயிலவும், முல்லை நிலத்திலுள்ள ஆய்ச் சிறுர் செலுத்த ஆனினங்கள் கன்றுகளை நினைந்து மனை தொறும் முற்பட்டுச் செல்லவும், ஆரம்பக்கல்வி கற்கும் மாணவச் சிறுர் பயிலும் நெடுங் கணக்கின் ஒலி அடங்கவும், எழின்மிகு நிலமகள் கருங்கடலாகிய ஆடையை உடன் முழுதும் போர்த்து உறங்குவது போலச் செறிந்த கரிய இருளானது மெல்லென வந்து உலகினைப் போர்க்கவும்,

"திங்கள் வாணுதல் முயற்கறைத் திலகமும், சிவந்த
மங்குல் ஆடையும், மயங்கிருள் ஓதியும், வான்மீன்
பொங்கும் ஆரமும் பொலிந்து, தன் கொண்கனைப்
மங்கை தேடிவந்தாள் ; என வந்தது மாலை." [பொருப்பன்

## இறைவன் சாதாரி பாடியது.

அப்பொழுது, தண்ணூர் தமிழளிக்கும் தண் பாண்டி நாடராகிய அண்ணல் தாம் சுமந்து வந்த விறகு கட்டை ஒரு பக்கத்தில் இறக்கி ஊன்றி வைத்து, அயல் நாட்டிலிருந்தும் போந்த இசை வல்லானது இல்லின் புறந் திண்ணையில் அமர்ந்து இளைப் பாறி, சுருதி கூட்டிச் சிறிதே இசையை எழுப்பிப் பாடினார்; ஏமநாதன் அவ்வின்னிசையைச் செவி மடுத்து, இவ்வாறு பாடுகின்றவன் யாவன் என்று கருதி, கொன்றைமாலை வேய்ந்த இறைவன் திருமுன் வந்து, 'நீ யாவன்' என வினவினன்; வினவ, நான் முகன் முதலாம் வானோர் அனைவரையும் தனது குற் றேவல் புரியும் அடிமைகளாகக் கொண்ட ஐயன்' 'பண்ணமைந்த யாழ் வல்லோனாகிய பாணபத்திர னுடைய அடிமையாவேன் யான்' என்று கூறி, 'சுவை கனிந்த இசையில் வல்ல அப் பாணபத்திரனிடத்து இன்னிசை பயிலும் மாணவர் பலருள் ஒருவேனாய்க் கற்க விரும்பி, யானும் இசை பயிலுந் தொழிலுடைய னாயினேன்; ஒப்பற்ற இசைக் கிழவனாகிய பாண பத்திரன் என்னை நோக்கி, தசை முழுதும் ஒடுங்க மூப்புற்றனை ஆகலின், இனி நீ இசை பயிலற்கு உரியையாகாய் என்று என்னை நீக்கி விட்டனன்; ஆதலினால், ஐயனே! யான் உலர்ந்த விறகினை வெட்டி விற்றாயினும் இவ்வயிற்றினை ஓம்புவேன் எனக் கருதி இத்தொழிலை மேற்கொண்டேன்' என்றனன். அது கேட்ட இசையில் வல்ல வடபுலப் பாணன், 'விறகு

மள்ளா! நீ பாடிய அவ்விசையை இன்னும் ஒரு முறை பாடுவாயாக' என்றுரைக்க, இறைவன் பாடுவான்: மடுவின் நீர் வறந்தாற் போன்ற நீண்ட கொடியின்கணுள்ள சிறிய காயாகிய பத்தர் அமைந்த நிறம் மிக்க கோட்டினையுடைய நல்ல யாழை இடப் பக்கத்தே தழுவி, மாடகத்தை முறுக்கி நரம்பை வீக்கித் தெறித்து, இருளின்கணிருந்து தேன் ஒழுகினாற்போல மென்மையாகச் சுருதி கூட்டி, சுரங்கள் எழுகின்ற தானங்தோறும் விரல்கள் விசையுடன் சென்று போக்கு வரவு புரிய, ஏழிசைகளால் உண்டாகும் பலவகைப்பட்ட இனிய பண்களில் ஒன்றாகிய **சாதாரியினை** நரம்பின் ஒலியும் மிடற்றின் ஒலியும் தம்முள் வேறின்றி ஒலிக்க, இன்னிசை பாடும் பொழுது, ஆகாதனவாய அழுமுகங் காட்டல், தலை நடுக்குறல் முதலிய உடற்றொழிற் குற்றமும், வெடிகுரல், மூக்கிஞ்ஞை முதலிய குரலின் குற்றமும், ஏனைய குற்றங்களும் இன்றி, எழுதிய சித்திரம்போல் அசைவறவிருந்து, அருவியோதை, வலம்புரி முழக்கம் முதலியனபோன்ற இசைக் குணமும், மூங்கிலிலையின் வீழ்ச்சியும், சிச்சிலிப் பறவையின் வீழ்ச்சியும் போன்ற பாடற் பண்பும் பொருந்த, மந்தரம், மத்திமம், தாரம் என்னும் கீழ் நடு மேல் நிலைகளில் இசையை நடாத்தி, அமிழ்தமன்ன செய்யுளோசையும் இசையோசையும் வழாமல், அனைவரும் விருந்தென்று தம் காதுகளாற் பருகுமாறு,

*" விரைசார் மலரோன் அறியா விகிர்தன்*
*அரைசாய் மதுரை அமர்ந்தான் என்னே!*

அரைசாய் மதுரை அமர்ந்தான அவனென்
புரைசார் மனனும் புகுந்தான் என்னே!"

"பாடல் மறையுந் தெளியாப் பரமன்
கூடல் கோயில் கொண்டான் என்னே!
கூடல் போலக் கொடியேன் அகமும்
ஆடல் அரங்கா அமர்ந்தான் என்னே!"

"நீல வண்ணன் தேரு நிமலன்
ஆல வாயில் அமர்ந்தான் என்னே!
ஆல வாயான் அலரில் வாசம்
போல் என் உளமும புகுந்தான் என்னே!"

என்று பாடியருளினன். அடியார்கள் பொருட்டு அருண்மேனி கொண்டு ஆண்டருளும் ஆலவாய்ப் பெம்மான் பாணர் தலைவனுகிய பத்திரனைக் காத் தருளத் திருவுளங்கொண்டு, பருந்தினோடு அதன் நிழல் செல்லுதல் போல யாழ் நரம்பில் எழும் இசை பின்தொடரப் பாடியருளிய இன்னிசையாகிய தேனு னது, உம்பர்களுடைய செவியாகிய காலின் வழியே ஓடி, மயிர்த் துளைகளின் வழியாகக் கசியுமாறு நிரம்பி, அழகுமிக்க இனிய அமுதமயமாகிய அவர்கள் உடலை இசைமயமாக்கியது. அருட் கடலாகிய ஆண்டவன் விளைத்த இன்னிசை அமுதத்தினைப் பருகி, மரங்களும் அசையாவாய், கடல்களும் ஒலியாவாய், மலைகளில் இருந்தும் இழிகின்ற அருவிகளும் நதிகளும் புரண்டு துள்ளாவாய், சிற்ப நூல் வல்லான் எழுதிவைத்த ஓவியங்களை ஒத்திருந்தன. யாழில் வல்லாரான விஞ் சையரும் தம் கைகளிலிருந்து வீணை நழுவுமாறு சோர்

வுற்று மயங்குவாராயினர். கண்ணுதற் பெருமான் கானத்தினைக் கேட்டு, 'போதுளான் பரமன் பாதப் போதுளான் ஆனுன்; வேலை மீதுளான் பரமானந்த வேலை மீதுளான் ஆனுன்; இந்திரன் தன் உடல் முழுவதும் உள்ள கண்களைப்போல் செவிகளையும் பெற்றிலேனே என்று ஏக்கற்றனன்; விருப்பு வெறுப் பற்ற தவத்தினை யுடையரான துறவியரும், சீவன் முத்தரும், மாபெருஞ் சித்தருமாகியோ ரெல்லாம் பாணபத்திரனுடைய துன்பத்தை அகற்றுவோனுகிய சோமசுந்தரப் பெருமானின் இசையாகக் கனிந்த அருளாகிய கடலில் தம் அன்பாகிய ஆற்றுடன் குளிர்ந்த கண்ணீராகிய வெள்ளம் பாய்ந்திட இன்பக் கடலுட்டிளைத்தனர். தம்முட் பகைமையுடையன வாய நச்சரவும் பல்பொறி மஞ்ஞையும், அரியும் கரியும், புலியும் மானும் ஆகிய விலங்கினங்களும், புள்ளினங்களும் தத்தம் பகைமையை அறியாவாய் இடங்கள் தோறும் ஒன்ருகக் கலந்து எம்பெருமா னின் இசைவலையிற்பட்டன. கிளைகள் எல்லாம் உலர்ந்து நின்றனவாகிய ஓரறிவுடைய மரங்களும் செவியறி வுடையனவாய் மெல்லிய தளிர்களை ஈன்று பூக்கள் மலர்ந்து கண்ணீரும் பொழிய நன்றறி மாந்தர் போல நகை முகம் மலர்ந்தன.

இவ்வண்ணம் விண்ணவரும் மக்களும் விலங் கும் புள்ளும் ஏனையவும் இசையிற் பதிந்த மன முத லிய கரணங்கள் யாவும் அசைவின்றி அடங்க, இறை வனது ஏழிசையின் மயமாய் இருந்த தன்மை, மெய்

யுணர்ந்தோரின் உள்ளம் இறுதியில் இறைவன் திரு வடிகளிற் சென்று ஒடுங்கிய தன்மையை ஒத்தது. கண்ணுதற் கடவுளின் கண்டத்தினின்றும் எழுந்த முல்லைப் பண்ணுகிய திப்பிய இசையானது இயங்குவ நிற்பவாதி உயிர்களையும், உம்பருலகினையும், மண்ணுல கினையும், எண்டிசைகளையும் விழுங்கித் தன் மயமாகச் செய்து, இசையில் வல்ல ஏமநாதன் உயிரையும் உடலையும் உருக்கியது. ஏமநாதன், சிந்தையுடன் பொருந்திய ஐம்பொறிகளும் செவிகளேயாகவும், ஐம் புலன்களும் ஓசையேயாகவும் அவ்விசையினைத் துய்த்து அசைவற இருந்தாைக, நான்மறை மொழிந் தருளிய திருநாவினுலே பாணபத்திரனது அடிமை யென வந்து பாடியருளிய இறைவர் இந்தனச் சுமை யுடன் மறைந்தருளினுர்.

## ஏமநாதன் இரவில் வழிக்கொண்டது.

அயல் நாட்டுப் பாண்மகன் 'இஃது யான் அறிந்த சாதாரிப் பண்ணன்று; இதனை நான் அறி வேன்' என்று இதுகாறும் ஒருவருங் கூறிற்றிலர்; இது தேவகானமாகும்; ஆகலின் இவற்கு இவ்விசை யினைக் கடவுளே யன்றி ஏனை மனிதர்கள் அறிவிக்க வல்லரோ? இது வியப்புடைத்தாம்' என்று கூறி, 'நீக்கப்பட்ட இம்முதியோனின் இசை இதுவாயின், குற்றமற்ற அப்பாணபத்திரனது இசைத்திறம் எத் தகைத்தோ' என எண்ணி, வருத்த முற்றெழுந்து, தன்னை அடுத்துள்ள பாண் மக்களின் கூட்டங்கள் குலைந்தொழிய, அன்றிரவே வழிக்கொண்டு ஓடத்

தொடங்கினான். பல்வகை ஆடைகளை மடித்து வைத்துள்ள பெட்டிகளும், நவமணிக் கலன்களும் பிறவும் அடங்கியுள்ள பேழைகளும், யாழ்க் கருவிகளும் ஆங்காங்கே கிடக்கவும், சிவிகை ஓர் வழியும், கவிகை ஓர் வழியும், விறலியர் ஓர் வழியும், மாணவர் ஓர் வழியும் தனித் தனி பிரிந்து செல்லவும், அச்சமும் மானமும் ஈர்க்கக் கூடற் பதியினின்றும் வடதிசை நோக்கிச் சென்றான் ஏமநாதன்.

## இறைவன் பத்திரனார்க்குக் கனவில் தோன்றியது.

அற்றைநாள் இரவிலே ஆலவாய்ப் பெருமான் பாணபத்திரன் கனவிலே எழுந்தருளி, 'பத்திரனே! நின் வேண்டுகோளின்படியே, இன்று இசையில் வல்ல அவ் வேமநாதனிடம் விறகாளாய்ச் சென்று யாம் பாணபத்திரன் அடிமை என்று கூறி இன்னிசை பாடி வென்று நின்னைக் காத்தனம்' என்று அருளிச் செய்தார்; சிவபெருமான் அங்ஙனங் கூறிய நெஞ்சினால் நினைத்தற்கரிய சொல்லைக் கேட்டலும், பத்திரன் உள்ளந் துணுக்குற்று, இச்செயல் புரிதற்கோ அடியேன் மறைகட்கும் எட்டாத இறைவனை இன்று குறையிரந்தபடி என்று கண்விழித்தெழுந்தார்; எழுந்தவர், அளவற்ற பெருமகிழ்ச்சியால் அகமலர்ந்து, மீதூர்ந்த அன்பினால் உந்தப்பெற்று ஞாயிறு தோன்றுமுன் விண்ணிழி கோயில் மேவிய கண்ணுதற் கடவுளின் திருவடிகளைப் பணிந்தனர்.

"கடிய கானகம் புகுதவோ கட்டிய விறகை
முடியி லேற்றவோ முண்டகத் தாள்கள்நொந் திடவந்து
அடிய னேன்பொருட்டு அடாதசொற் பகரவோ வஞ்சக்
கொடிய னேன்குறை யிரந்தவா விளைந்ததே குற்றம்."

இதற்கு என்செய்வேன்? என இரங்கி, 'நெடியோன் முதலிய வானவர் நெஞ்சங்களையும், அளவிறந்த மறைகளின் முடிகளையும் கடந்தருளிய எம்பெருமானுடைய திருவடித் தாமரைகள் பாவியேன் பொருட்டாக இப்பெரிய நிலத்தின்கண் தோய்ந்தனவே; ஐயனே! நின் பெருமை அடியேனுக்கு எளிதாயிற்றோ? பெருமானே! நினது அருமைத் திருவுருவம் நாதாந்தத்தினையுங் கடந்தருளிய உண்மை யறிவானந்த மென்று பெரியோர் கூறுவர்; அத்தகைய திருமேனி இன்று இந்நிலவுலகில் ஒரு மனித வடிவாய், வெயிலானது தெறும்படி வெட்டிய விறகினைச் சுமந்து பேதையாகிய அடியேனது அன்பின் அளவாகியதோ? எம்பெருமான் திருமுடியானது பாற்கடலிற் பள்ளிகொண்ட திருமாலும், அவனது உந்தியிற் றோன்றிய நான்முகனும் அறிந்ததன்று; அரிய உண்மைப்பொருள்களின் முடிவாயது; பரந்தெழுந்த விசும்பினையும், பல்கோடி அண்டங்களையுங் கடந்தது; அஃது இன்று எளியேன் பொருட்டு வெட்டப்பட்ட விறகினைச் சுமந்ததோ?' என்று வணங்கி நின்று துதித்து, அங்கயற்கண்ணி பங்கனை வலம் வந்து, மீண்டு, மன்னர் பெருமானாகிய வரகுணன்பால் வந்து அவன் அடிகளை வணக்கஞ் செய்தனர். வரகுண பாண்டியன் ஏழிசைத் தலைவனாகிய பாணபத்திரனது

வருகையை அறிந்து, ஏனை இசைக் கிழவனையும் அழைமின் எனப் பணிக்க, ஏவலர் ஏமநாதன் இருப் பிடஞ் சென்று பார்த்துக் காணாமல், அவன் மனம் வருந்திப்போன தன்மையை அறியாதவர்களாய், அவன் எங்குளான் என்று தேடுவாராயினர். அப் பொழுது அங்கே அருகிலுள்ளார் சிலர், 'அவன் நெரு நல் இங்கிருந்தனன்; அவனிடம் பாணபத்திரனது அடிமை என்று கூறிக்கொண்டு மாலைப்பொழுதில் விறகு சுமையுடன் ஓர் முதுமகன் வந்து பாடிக் கொண்டிருந்தான்; பின்பு நிகழ்ந்ததனை அறியேம்; ஏமநாதன் நள்ளிரவில் இல்லம் விட்டு ஓடிவிட்டனன்;' எனக் கூறினர். அதுகேட்ட ஒற்றர், வென்றி வேந்தன் பாற் போய் அறிந்தவற்றை உரைத்தனர். உரைத்த லும் அரசன் ஐயமும், வியப்புமெய்தி, தன்பால் வந்து நின்ற பாணபத்திரரை நோக்கி, 'அவ்வியாழ்ப்பாணன் சென்றவாறு எங்ஙனம்? இங்கு நின்றும் போனபின் நீயாது செய்தனை' என வினவ, இன்னிசைத் தலைவ ராய பத்திரர், தென்னவன் அடிபணிந்து கூறுகின்றார்: 'நென்னல் அடியேன் நினது அடி நிழலை நீங்கிப் பின் னல் வார்சடைப் பெருமான் திருமுன் சென்று அவர் திருவடிகளை வணங்கி, எனது துன்பத்தினைக் கூறிக் குறையிரந்து வேண்டி, மீண்டு மனையிற் புக்கிருந் தேன்; மங்கை பங்கராகிய பெருமான் எனது கனவில் எழுந்தருளி, 'நின் பொருட்டாக நாம் விரைந்து விறகு சுமந்து திரிந்து நின் பகைஞனுடைய ஏமநாதன் தலை வாயிலிற் போய்ச் சாதாரிப்பண் பாடி வென்று அவனைத் துரத்திவிட்டேம்' என்று மொழிந்தருளி

னார்; அடியேனும் கண் விழித்தேன்; இதுதான் நிகழ்ந்தது' என்றனர்.

## அரசன் பாணபத்திரர்க்குச் சிறப்புச் செய்தல்.

ஏவலாளர் சென்று அறிந்து வந்து உரைத்ததும், யாழ்த் தலைவரின் கனா நிகழ்ச்சியும் ஒத்திருத்தலான், வேம்பலர் தாரோன், இது நமது அழகிய கூடற்பதியில் எழுந்தருளியுள்ள சோமசுந்தரக் கடவுளின் திருவிளையாடல் எனத் தெளிந்தோனாய், பாணர் தலைவரது பேரன்பையும், விண்ணோரைக் காக்கும் வண்ணம் ஆழிநஞ்சுண்ட ஆண்டவனது பேரருளையும் வியந்து புகழ்ந்து சென்று ஆலவாய் மேவிய அரும்பொருளை வணங்கினன். வணங்கினவன், பின்பு ஏழிசைக் கிழவராய பத்திரரை யானையின் பிடரின் மேல் வைத்து, மாடங்கள் செறிந்த பெரிய நகரை வலஞ் செய்வித்து, அவர் உள்ளம் உவகை கொள்ளுமாறு மிக்க வரிசைகளை ஈந்து, பாணரை நோக்கி, 'தேவரும், தவமுனிவரும், தேவரிற் சிறந்த யாவரும் தமக்கு ஆட்செய்ய வீற்றிருக்கும் பெருமான் இரண்டு திருவடித் தாமரைகளும் வருந்துமாறு எளிவந்து நுமக்கு ஏவல் செய்து நும் குறையினை முடிப்பாராயின், அனைவரும் உமக்கு ஏவலர் அல்லரோ? ஆகலின் நீர் என்னை உடைய தலைவர்; நான் உமக்கு அடிமை; நீர் தலைவரும் நான் அடிமையும் ஆகிய இம் முறையை அன்றி எனக்கு உம்மொடு வேறு வழக்

கில்லை; இன்னும் அடியேன் கூறுவதாகிய குறை ஒன்றுண்டு; அஃது, இன்று முதல் நீர் வேதநாதனுகிய இறைவனையே பாடுதலாம்; என்று வேண்டி அனுட பினுன். பாணபத்திரர் அரசனளித்த ஆடை அணி செல்வம் முதலியவற்றைத் தம்மைத் துதிக்கின்ற புல வர், மாணவர் முதலியோர்க்குக் கொடுத்து, பாண் சுற்றத்துடனும் மன்னவனளித்த வரிசையுடனும் இல்லத்தின்கண் வந்தடைந்து அளவற்ற மகிழ்ச்சி யுடன் அமர்ந்திருந்தனர்.

## இறைவன் திருமுகம் அளித்தமை.

இறைவன் திருமுன்னர்ப் பாடும்படி அரசனுற் கூறப்பட்ட இதுவே எமக்கு அறிவென நினைந்த யாழ் வல்லார், அன்று முதல் திங்களின் மரபில் வந்த தென் னவன் கோயிலிற் பாடுதலைக் கைவிட்டு, மதிமுடிப் பெருமான் திருக்கோயிலிற் சென்று முப்பொழுதும் பாடும் நியமத்தை மேற்கொண்டனர். இன்னணம் இறைவன் திருமுன் பாடுந் தொழிலையன்றி இவருக்கு வேறு தொழிலின்மையால் வறுமை யெய்தினர். எல் லாம் வல்ல சித்தராகிய இறைவர் தம் அடியவர் படும் இன்னலைப் பொறுப்பரோ? மன்னவன் கருவூலத்தி லுள்ள பொருள்களை நாடோறும் ஒரோ வொன்ருகக் கவர்ந்து, தமது திருமுன் யாழிசை பாடும் பாணர் முன் வைப்பாராயினர். சிலநாள் பொற்காசுகளும், சிலநாள் மணிக்கலன்களும், சிலநாள் அழகிய பொன் னுடைகளும், இவ்வாறே மற்றும் சிலசில நாட்களில் வேறுள்ள பொருள்களும் கொணர்ந்து அளித்திட,

மெய்யன்பராகிய பாணர் அவற்றைக் கொண்டு சென்று உருக்கியும், மாற்றியும் தம்மைச் சார்ந்தோர்க்கும் இரந்தோர்க்கும் ஏனையோர்க்கும் அளித்து அவர்கள் உள்ளக் கவற்சியைப் போக்கிவருவார். இவ்வாறு நாள்தோறும் அளித்துவரும் சிவபெருமான் பிந்திய நாட்களிற் கொடாது மறுத்தாராக, நித்தலும் சென்று சென்று இன்னிசைபாடி வணங்கி ஒன்றும் பெருமல் மீளும் பத்திரனர் வறுமைக் கடலில் மூழ்கி உய்வகை வேறு காணுராய், உறவினரும் துன்பமுறப் பொறுக்கலாற்ருது துயின்றனர். அப்பொழுது அவர் கனவின்கண் சொக்கலிங்கப் பெருமான் எழுந்தருளிக் கூறுகின்ருர்: 'அப்பா, பாண்டியன் கருவூலம் யானையுண்ட விளங்கனிபோல் ஆகுமாறு அதிலுள்ள பொருள்களைக்கவர்ந்து சாலநாள் அளித்துவந்தோம்; இதனை எம்பால் அன்புவைத்தவனுன வரகுணன் அறிந்தானுயின், ஐயமுற்றவனுய் மனம் வேறுபட்டு, 'உட்காவல், புறக்காவல்களும், கயல் இலச்சினையும் உள்ளவாறே இருப்ப, இப்பொருள்களைக் கவர்ந்தவன் உயிர்கள்தோறும் ஒளித்து நின்ற ஒருவனுயிருப்பனே?' என எண்ணுவதன்றி, கருவூலங் காப்போர்க்கு மிக்க தண்டனையும் விதிப்பன். ஆதலினுல், 'நின்போல் அன்பு நிறைந்த உள்ளத்தின்கண் எம்மை இருத்தியுள்ள போந்தைக் கண்ணியோனுகிய சேரமானுக்கு இப்பொழுது நாம் ஒரு ஓலை எழுதித் தருவோம்; நீ ஆங்குச் செல்வாயாக' என்று மொழிந்தருளி, மறைகட்குப் பொருள் அருளிச்செய்த திருவாக்கினுல்,

" மதிமலி புரிசை மாடக் கூடற்
பதிமிசை நிலவும் பானிற வரிச்சிறை
அன்னம் பயில்பொழி லால வாயின்
மன்னிய சிவன்யான் மொழிதரு மாற்றம்
பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க்கு
உரிமையி னுரிமையி னுதவி யொளிதிகழ்
குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச்
செருமா வுகைக்குஞ் சேரலன் காண்க ;
பண்பால யாழ்வல பாண பத்திரன்
தன்போ லென்பா லன்பன் ; தன்பால்
காண்பது கருதிப் போந்தனன் ;
மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே."

என்னும் விழுப்பமிக்க திருமுகப் பாசுரத்தினைக் கூறி எழுதிப் பாணர் கையிற் கொடுத்தருளி மறைந்தனர்.

## பாணர் மலைநாடு அடைந்தமை.

பாணபத்திரர் தாம்பெற்ற திருமுகத்தைப் பட்டாடையில் வைத்துப் பொதிந்துகொண்டு, தலைச் சங்கப் புலவராகிய சிவபெருமான் திருவடிகளை வணங்கித் திருக்கோயிலை அடைந்து வலம்வந்து, விரைந்து நீங்கி, மேற்றிசையிலுள்ள மலைநாட்டிற்கு வழிக் கொண்டு, இடையேயுள்ள முல்லை, குறிஞ்சி நிலங்களையும், வெப்பமிக்க பரல்கள் செறிந்த பாலை நிலங்களையுங் கடந்து, பலாவின் முட்புறக்கனிகள் கால்களில் இடற, மெல்ல மெல்ல நடந்து சென்று வளப்பமிக்க மலைநாட்டினை அடைந்தார். அடைந்தவர், அறமகளாலாகிய அறச்செல்வமும்,

திருமகளாலாய பொருட் செல்வமும், கொற்றவையா ளுய வெற்றிச் செல்வமும், வடமொழி தென்மொழி யாகும் இரு பகுப்பினையுடைய கலைமகளாலாகிய கல்விச் செல்வமும் ஒருங்கு வாய்ந்ததும், அலைகட லுடுத்த மலைநாடாகிய நங்கைக்கு முகத்திலிட்ட திலகம் போன்றதுமாகிய திருவஞ்சைக் களம் என்னும் மாநகரை யெய்தி, அந்நகர் வீதியிலுள்ளதோர் தண்ணீர்ப் பந்தலில் தங்கியிருந்தனர். அவர் இவ்வாறிருப்ப, விண்ணுலகும் புகழும் நீதியினையுடைய அச் சேர வேந்தருக்கு, கண்ணுதற் பெருமான் கனவிலே தோன்றி, 'நின்பால் வந்துள்ள யாம் பாண்டியனது மதுரைப் பதியில் உள்ள சித்தராவோம்; நின்னைக் கண்டு நன்னிதி பெறும் பொருட்டு நம்முடைய திருமுகங் கொண்டு, நமது இன்னிசை பாடும் பாணபத்திரன் ஈண்டு வந்துற்றனன். மன்னவனே! நீ அவற்கு அரும் பொருள் கொடுத்து விரைந்து வர விடுப்பாயாக' என்று கூறி மறைந்தருளினார். உயிர் கண் மாட்டுச் சுரந்தெழும் தண்ணளி மிக்க வெண் கொற்றக் குடையினையுடைய சேரர் பெருமான் அது கேட்டு உறக்க நீத்தெழுந்தனன். எழுந்த அரசன், அமைச்சர் முதலாயினோருடன் இரவிலே தாங் கண்ட கனவினைக் கூறி, ஏவலாளரை விளித்து, 'அங்கயற் கண்ணி பங்கன் திருமுகம் பெற்று வந்த பாணர் எங் கிருக்கின்றனர் எனத் தேடிக் கண்டு வருவீராக.' எனப் பணித்தனன். மன்னவன் உழையர் அந்நகரின் மாடங்களிலும், திண்ணைகளிலும், கடைவீதிகளிலும், மன்றங்களிலும், மற்றும் பலவாய இடங்களிலும்

சென்று சென்று தேடி, இன்னிசை கை வந்த பாண பத்திரரை ஓர் தண்ணீர்ப் பந்தரிற் கண்டு, விரைந்து சென்று அரசனுக்கு அறிவித்தனர்.

## சேரமான் பெருமாள் பாணர்க்குச் சிறப்புச் செய்தமை.

மலைநாட்டு மன்னர் பெருமான் அதுகேட்டுச் சேனையுடன் விரைந்தெழுந்து பாணர் தலைவரை அடைந்து, அவரைக் கண்ட மாத்திரத்தே அன்பி லுலே குவியப்பட்ட தாமரை மலரனைய கைகளைத் தலைமேற் கொண்டு, பெருங் களிப்புடன் கூத்தாடித் தண்டம்போற் கீழே வீழ்ந்து, இனிய தேனைக் கண்டு மகிழும் வண்டினைப் போல் உவகை யுற்றனன். பின்னர்,

> "வாங்கினன் திருமுகம் ; மலர்க்கண் ஒற்றினன் ;
> தாங்கினன் முடிமிசைத் தாமம் போல் ; மகிழ்
> தூங்கினன் தடங்கணீர் துளிப்ப ; மெய்யெலாம்
> வீங்கினன் பொடிப்பெழ வேந்தர் வேந்தனே."

மின்னவிருஞ் செம்பொன்மணி மாடக்கூடல் மேவிய சிவபெருமான் எழுதி விடுத்த மாற்றத்தைத் திரு முகத்தானுணர்ந்த சேரர்பிரான் களிப்பெல்லை தெரி யாதவனாய், அத்திருமுடங்கலைப் பொற்றவிசில் வைத்து யானையின் தலையில் ஏற்றி, பெருமை பொருந் திய இன்னிசை யாழ்ப்புலவராகிய பாணபத்திரரை முன்னர்வைத்து, தான் பின்னே இருந்துகொண்டு

ஒளி விளங்குகின்ற இரட்டைக் கவரிகளை வீசி, பல் வகை வாச்சியங்களும் முழங்கத் திருநகரை வலஞ் செய்வித்து, நல்லெழின் மிகுந்த மெல்லியலார் பல் வகை மங்கலப் பொருள்களை ஏந்தி எதிர்கொள்ள, வானளாவிய மாளிகையின்கட் கொண்டு சென்றனன்; சென்று, நஞ்சணிகண்டத் திறைவனது அன்பராகிய பத்திரரை மணம் பொருந்திய நன்னீராட்டி, ஐவகை நிறங்களும் அமையத் தீட்டி ஓவியப்படுத்திய மணி மண்டபத்தில் அழகிய பொற்றவிசின் மீது இருத்தி, அருச்சித்து, அறுசுவை இன்னமுதூட்டி, பொன்னி றம் வாய்ந்த நன்மணக் கலவைச் சாந்தமும், தீம்பூ முதலிய முக வாசமும், பசிய பொற்றட்டின்கண் வெற்றிலை பாக்கும் அளித்து உபசரித்தனன்.

## பாணர் அரும்பொருள் பெற்று மீண்டமை.

பின்னர், சோமசுந்தரக் கடவுளின் திருமுகத்தில் 'மாண்பொருள் கொடுத்து வரவிடுப்பதுவே' என்று பணித்திருத்தலான், அங்ஙனமே அவரை விடுப்பேம் என்று கருதி, கருவூலத்தைத் திறந்து பாணரை அழைத்துக் காண்பித்து, 'இந்தச் செல்வம் அனைத் தும் உம்பர்பிரான் அடியீராகிய நீரே உடையீர்; இவற்றைக் கைக்கொள்ளும்' என்றனன். என்ன லும், வேந்தர் பெருமான் வாக்கினைக் கேட்ட பாணர் எதிர்வணங்கி, சிவபெருமான் திருவருளுக் குரியீராகிய நீர் தந்தது எனக்குப் போதியதென்று கூறினர். சேர மான் எல்லாப் பொருளும் அவருடையனவே என்று

தான் எண்ணியபடியே கொடுக்கக் கொடுக்க, இன்னல் நீங்கிய இசைப் பாணர் அவற்றை மறுத்து மறுத்து, விளங்குகின்ற பொன்னணி, பொற் பட்டாடை, பொற்சிவிகை, யானை, குதிரை முதலியவற்றைத் தமக்கு அமைவன என்னும் அளவின் வகையால் ஏற்றுக்கொண்டனர். தம்மிடம் வந்து செல்லும் பெரியார்கட்கு ஏழடி தூரம் பின்சென்று வழியனுப்புதல் மரபு என்பர். ஆனால், அருநிதி யளித்த உதியர் வேந்தரோ, ஆரா அன்புடன் நெடுந்தூரம் பின்சென்று, நகர்ப்புறத்தில் அவரை விடுத்து மீண்டனர். பன்னருஞ் சிறப்பின் இன்னிசை வல்லாரும், சேரர் பெருமான் அளித்த செல்வப் பொருள்கொண்டு மீண்டு, அருநிதிக் கிழவனாய அளகை வேந்தனைப் போல மதுரை புக்கனர். புக்கவர், மதுரை நாயகனாகிய சொக்கலிங்கப் பெருமானை வணங்கி, தாம் கொணர்ந்த பொருளனைத்தையும் அந்தணர், புலவர் முதலாய பரிசிலரனைவர்க்கும் வரிசையாலளித்து வாழ்ந்து வந்தனர்.

## இறைவன் பாணர்க்குப் பலகையிட்டமை.

தம்மை ஆளாகக் கொண்டருளிய சோமசுந்தரப் பெருமானை முன்னர் மூன்று காலங்களிலும் சென்று பாடி வணங்கி இன்புறும் பாணபத்திரனார், சேரமான்பால் இருநிதி பெற்ற பின்னர், அன்புமிக்கு, இடையாமத்திலுஞ் சென்று, வென்றி பொருந்திய திருநந்திதேவரின் பின்புறத்தினில் நின்று, இசை பாடுதலைக் கடனாகக் கொண்டனர். பாணபத்திரர் நள்

ரிரவில் வந்து பேரன்போடு யாழ்பாடுந் தன்மையை யும், அவர் எத்தகைய இடையூறுண்டாயினும், தம் கடப்பாடாகிய ஒழுக்கநெறியின் இழுக்காதவர் என்ப தையும் உலகினர் அறியுமாறு திருவுளம்பற்றிய சிவ பெருமான் திருவிளையாடலினால், ஓரிரவின் இடை யாமத்தில், எண்டிசையினும் கரிய முகிற்கூட்டங்கள் ஆர்த்தெழுந்து, வருணன் பண்டு மதுரையை அழித்தற் பொருட்டு ஏவிய முகிலேழும் வளைந்தாற்போல வளை ந்து, வெள்ளிய மழைத்தாரைகள் இருப்புக் கோல் களை நிரல்பட நட்டுவைத்தாற்போல் நிறம் கருகித் தோன்றுமாறு இருள்கான்று, மின்னி, இடித்து, இடை விடாது நீரைப்பொழிந்தன. தம்மையும் தலைவனையும் உணராதவர் உள்ளம்போல், உள்ளென்றும் வெளியெ ன்றும் மருங்கென்றும் கீழென்றும் மேலென்றும் உண ரலாகாது செறிந்த இருளிலே, கடல்நீர் முழுவதையும் எடுத்துக் கவிழ்ப்பது போன்ற அப்பெருமழையில் நனைந்துகொண்டு வருவோராகிய பாணர், அம்மழை யை மலர்மழை யென நினைந்து, திருக்கோயிலுட் சென்று புகுந்து, சொக்கநாதனை வணங்கி, அப்பெரு மானது அருண்மழையில் நனைந்து, தேன்மழை பொழி வதுபோல் இனிய யாழிசை பாடுவாராயினர். நந்தி யெம்பெருமானின் பின்னே நின்று யாழினை இடத் தோளில் அணைத்து, நரம்பை அமுக்கித் தெறித்து, மிடற்றின் ஒலியை எழுப்பி, தண்டமிழ்த் தொடையாகிய இன்னிசைப் பாடலைப் பாடத் தொடங்கிய பாணனார், மழையால் நரம்பு நனைந்து இசை குறையவும், குரல் முதலாகிய இசைகளின்

எல்லை கடவாமல் போக்கு வரவு புரியும் விரல்கள் விறைத்து வலி கொள்ளவும், குளிரால் மெய்ம்மயிர் சிலிர்க்கவும், நிரம்பிய சேறு அடிகளை மூடவும், நின்ற நிலை பெயராமல், சிவபெருமான் செவிவழிப் பாய்ந்து அருட்பைங்கூழ் தலையெடுக்குமாறு, உள்ளத்தில் நிறைந்த அன்பே இசை மயமாக வெளிப்படுதல் போல, என்பினையும் உருக்கும் அமுதமனைய இன்னிசை பாடுவாராயினர்.

1. "மாதர் நகையாய் மதுரேச ருண்பலிக்கெம் மனைவாய் வந்து
காதன் முகத்தரும்பிக் காட்டியென் சிந்தை கவர்ந்தார் போலும்
காதல் முகத்தரும்பக் கையறவு தீரக் கலப்பேன் பாதி
பேதையுரு வாயிருந்தார் நாணிவிழித் தாவி பிழைத்தேன்
[போலும்."

2. "ஒண்ணுதலாய்..............பெற்றேன் போலும்."
3. "ஐயரியுண் கண்ணாய்..............தரித்தேன் போலும்."

என்னும் இம்மூன்று பாடல்களையும் கனவு நிலையுரைத்தல் என்ற துறையில் பாணர் பாடிய இசைப் பாட்டுக்களாகத் திருவிளையாடற் புராண ஆசிரியர் இயற்றியுள்ளார்.

இசைக்கிழவர் தம்மைத் தலைவியாகவும் பெருமானைத் தலைவராகவும் கொண்டு பாடினராதல் வேண்டும். இன்னணம் பத்தினி மார்க்கத்தில் நின்றும் பெருமானை வழிபட்டுப் பாடுவதனைச் சைவ சமயகுரவர்களின் வாய்மொழியாகப் போந்த அருட் பாக்களாகிய தேவார, திருவாசகங்களினுங் காணலாகும். மேலும், இச்செய்யுட்களில் முறையே 'காதல் முகத்

தரும்பி' என்றும், 'கானம் இசைத்து' என்றும், 'செங்கை வைத்து' என்றும் கூறியிருப்பன, பக்குவ மடைந்த ஆன்மாக்கட்கு ஆசானாக வந்து அருள் புரியும் சிவபெருமான் பாவனையாலும், வாசகத்தாலும், பரிசத்தாலும் செய்யும் தீக்கைகளைக் குறிப்பால் உணர்த்துவனவாம். இன்னும் இறைவன் பலி கொள்ள வருதல் என்றது உய்தி பெறுதற்குரியோரின் உடல் பொருள் ஆவிகளைக் கொள்ளுதல். உடல் பொருள் உயிர் என்னும் மூன்றனையும் இறைவன் திருவடிக்கே உரிமையாக்கும் பேரன்பினராகிய இசைத் தலைவர், சிவபெருமானால் முற் கூறப்பட்ட மூவகைத் தீக்கைகளையும் முறையே பெற்றவராவ ரென்பது பொருத்தமேயாகும்.

பதியப்பட்ட பேரன்பினாலேயே அறியப்படு வோனாகிய சோமசுந்தரப் பெருமான், பண்டு இசை பாடும் இருவர்க்குப் பரிசிலாகக் கொடுந்தருளிய சங்கத் தோட்டினை யணிந்த திருச்செவிகளில் மழை நாங்கு நள்ளிரவிற் போந்து இன்னிசை யூட்டும் பாணர்தம் திருத்தொண்டினைக் கண்டருளி, 'அன் பனே, நீ இந்தப் பலகையின் மேல் நின்று பாடக் கடவாய்; இது நினக்கே உரியது' என்று விசும் பிற் கூறி, நவமணிக ளிழைக்கப்பட்ட பலகை யொன் றினை இட்டருளினார். யாழில் வல்ல பாணபத்திரனார், இறைவன் திருவருளாணையை மறுத்தற் கஞ்சிய வராய், இடப்பட்ட பொற்பலகையின்கண் ஏறித் தேனினும் இனிய இசையினைப் பாடி, நான்மறை

முடியில் விளங்கும் கழலணிந்த திருவடிகளை உளத்திற் கொண்டு, அத்திருப்பலகையையுங் கையில் ஏந்தித் தனதில்லத்திற்குப் புறப்பட்டனர். அப்பொழுது கரிய முகில்கள் நீங்கப்பெற்று வானம் விளக்கமுறுத லான், சந்தனப் பொதியிற் செந்தமிழ்க் குரவனுகிய குறுமுனிவன் குரைகடல் பருகிய ஞான்று அதன்க ணுள்ள பொன்னும் மணியும் முத்தும் புலப்பட விளங்கினுற் போல விண்மீன்கள் விளங்கித் தோன்றின; இசைப்புலவருஞ் சென்று தனதில்லம் புக்கனர்.

பரிதியஞ்செல்வன் திருக்கண் விழித்துப் பரந்த இருட்கூட்டத்தைக் கிழித்துச் சிவந்த கிரணங்க ளாகிய ஆயிரங் கைகளையும் விரித்து அலைசெறிந்த குணகடலை நீந்தும்பொழுதில், தென்புலங் காவல் கொள்ளும் வரகுண மன்னவன், தங்கள் குலதெய்வ மாகிய சோமசுந்தரக் கடவுள் இரவில் பாணபத்திர ரது பாடலுக்கு உவந்தளித்த திருவருளாகிய பரிசிலைக் கேட்டறிந்தனன்; அளவற்ற வியப்பும் விம்மிதமும் எய்தினன்; சிவபெருமானது அன்பு நிறைந்த திருத் தொண்டரும் இன்னிசை மன்னரும் ஆகிய பாணரை இறைவன் இட்டருளிய அப்பொற்பலகையின்மேல் இருக்கச்செய்து, மன்னர் மன்னனுகிய வரகுண பாண்டியன் 'இவனே எம்முடைய மதுரை நாயகன்' என்று கருதி, ஒண் மணிகள் பதித்த பொன்னணி களையும், விளைநிலங்களையும், ஏனைய நற்பொருள்களை யும் நாடொறும் முறையாக நல்கி வந்தனன். அரச

னருளிய வரிசைகளைப் பெற்ற இசைப்பாணர், ஏறு யர்த்தவர் திருக்கோயிலின்கண் நான்கு வேளைகளி லுஞ் சென்று முறைப்படி வழிபட்டு ஒழுகுவாராக, மன்னவனும் முன்னவன் கோயிலிற்சென்று முழு முதல்வன் திருவடிகளை வணங்கிப் பரவுவானுகிச், சில நாட்சென்றபின், பேரொளிப் பிழம்பாம் இறைவனது திருவுருவத்தைப் பெற்றுச் சிவலோக மெய்தினன்.

## பாணபத்திரர் மனைவியும் ஈழப் பாடினியும்.

இனி, பாணபத்திரரைப் போன்றே அவரது வாழ்க்கைத் துணையாகும் பாடினியாரும் இசைபாடும் ஆற்றலும், இறைவன்பால் அன்பும் உடையராய், நாளும் சோமசுந்தரக் கடவுள் திருமுன் சென்று யாழ் கொண்டு பாடும் கடப்பாட்டினரென்பதும், அவ் வாற்ருல் அப்பெருமானது திருவருட் பேற்றுக் குரிய ராயினவரென்பதும் பின்வரும் 'இசைவாது வென்ற' வரலாற்ருல் அறியப்படும்.

வரகுண பாண்டியன் பரகதியுற்ற பின்னர், **இராசராசன்** என்னும் பாண்டியன் அரசுகட்டிலேறி அவனியை ஆண்டுவருங்கால், அவற்கு அமிழ்தமும் ஆவியும் போன்றவளான மையற்கிழத்தி யொருத்தி இசை பாடுவதில் வல்லளாயிருந்தனள். அப்பொழுது, திருமகள் போலும் பொற்பும் தெய்வக் கற்புமுடைய பத்திரனுர் மனைவிக்கும், அவட்கும் இசைத்திறத் திறல் இகல் மூண்டது.

மன்னவன் அன்பிற்குரிய மடந்தை அதனைப பொருளாய், 'இப்பாடினிக்கு எதிராக ஒரு பாடினியைப் பாடவிட்டு இவள் செருக்கினை அழிப்பேன்' என எண்ணித் தன் கருத்தை அரசனுக்கு அறிவித்தனள். அன்னவள் சொன்னவாறொழுகும் மன்னனும், அத்தகைய விறலியை ஆராய்ந்து ஈழநாட்டினின்றும் வரவழைக்க, அவ்வீழப் பாடினி, விறலியர் கூட்டத்துடன் போந்து, மன்னனை வணங்கி, ஒரு கின்னர மங்கைபோல் இன்னிசை பாடினள். மங்கை ஒருத்திபால் மனம் வைத்தலால் மேல்வரும் தீய பழியினை நோக்கானாகிய அரசன், அவ்விறலியை நோக்கி, 'பாணபத்திரன் மனைவியை என் முன்னே நின்னுடன் பாடுதற்கு அழைப்பாயாக; அவள் அதற்கு ஆற்றாளாய் வேறு போக்குச் சொல்லினும், யாம் அவள் சார்பாய் நின்னைத் தடுப்பினும், விடாது தொடர்ந்து அவள் உள்ளம் வெள்குமாறு வஞ்சினங் கூறி வளைந்துகொள்' என்றுரைத்து அவளை இருக்கைக்கண் ஏக விடுத்து, பின்னர், பத்திரன் மனைவியாகிய கற்பிற் சிறந்த பொற்புடை விறலியை அழைத்து, 'பாடினி யொருத்தி என்னுடன் பாடி வெல்வார் ஈண்டு உளரோ? என்று கூறிக்கொண்டு வந்திருக்கின்றனள்; நீ அவளுடன் பாடுதற்கு வலியுடையையோ?' என்று உளத்தொன்றும் புறத்தொன்றுமாகக் கூறிக் கேட்டனன். அதுகேட்ட பத்திரன் விறலி, 'அரசே, மாறுதலில்லா மாண் கற்பும், இந்நான்மாடக்கூடலில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானுடைய திருவருளும் எனக்குத் துணையாக இருப்பத

ஞல், நான் அவளுடன் பாடி வென்றியடைதலே யன்றி, தோல்வியுற்றுத் துன்பமுழந்து வாடுவே னல்லேன்' என மொழிந்தனள்.

## இசை வாது.

மற்றை நாள் பாண்டியன் அவ்விருவரையும் தனது அவைக்கண் அழைத்து, ஒருவருக்கொருவர் நேராக இருந்து பாடச் சொல்லினன். கலத்திற் போந்த காரிகையோ இசைபாடுமுன் வசை பாடுவாளாய், பாண்டி நாட்டுப் பாடினியை இகழ்ந்துரைத்து, பல்வகைக் கேள்விகளைக் கேட்டு, 'இவற்றிற்கு விடையிறுத்து என்னுடன் பாடுதி; இல்லையேல் நினக்குப் பழியாகும்' என்றனள். அதுகேட்டு, இருமையும் பெறுதற்குரிய அரும் பெறற் கற்பினையுடைய இசைவலான் மனைவி, 'மரக்கலத்தில் வந்த கல்வியின் பெருமையும், வாதஞ் செய்வதின்மேற் சென்ற மனவெழுச்சியின் மாண்பும் அரசவை யறிய நீ வாய் திறந்து காட்டவேண்டியவே; யான் நின்னுடன் இசைவாது புரிதற்கு எதிரன்றி, நின் தீய வாய்ப் பேச்சினுக்கு எதிரல்லேன்' என வுரைத்தனள். மீனவனே, அவ்விருவரையும் விலக்குபவன்போல் இடை நின்றுதடுத்து, நீவிர் இப்பூசலை ஒழித்துப் பாடுவீராக; நுமக்குள் வென்றோருக்குத் தோற்றோர் அடிமையாவதே சூளுறவாகும்' எனக் கூறி மானத்தை மூட்டி விட்டனன். உடனே ஈழநாட்டுப் பாடினி, முற்பட யாழினைத் தழுவி, பெருமிதந் தோன்றும் புன் முறுவல் சிறிது வெளிப்பட, நரம்பினைத் தெறித்து,

பண்ணமைந்த ஏழிசைகளையும் இறைமகன் செவிக் கண் அவனது காமக் கிழத்தியின் மழலை மொழிகள் போல் வாக்கினுள். பாணர் கோமகனின் பன்னியாகிய விறலியும், வீணையை எடுத்து, மாடகத்தை முறுக்கி விசித்து, ஒள்ளிய நரம்பினை யெறிந்து, இயக்கரும் செவி மடுத்து நாணுமாறு யாழிசையுடனே மிடற் றிசையும் ஒத்தியங்க, இன்னிசை யமுதினைப் பலர் செவியினும் நிரப்பினுள். அவ்வமயம், அவைக்களத் திருந்தார் அனைவரும், மன்னவன் மனக் கருத்தினை யறியாமல் பத்திரனுர்தம் விறலியின் பாடலை வியந் தனர். அரசனே, இலங்கைப் பாடினியின் பாடலை வியந்து மகிழ்ந்தனன். அரசன் உட்கிடையை அறிந்த மன்றுளோரும் அவன் புகழ்ந்தவாறே ஈழத்துப் பாடினியின் இசையை மெச்சினர். முன்னவன் அருளைப் பெற்று மூவகைப் பற்றினையுந் துறந்த தூயவரேனும் மன்னவன் சொன்னவாறே உரைப்பது வழக்காறல்லவோ? மையற் புதுநற வருந்தினமை யால் நன்று தீது அறியாருய கன்னி நாடன், அவையி லுள்ளாரை நோக்கி, இவ் விசைவாதின் முடிபு இன்று ஒரு நாளிலேயே அறிய வியலுமோ? என வுரைத்து, அவர்களை அனுப்பினன். இலங்கை விறலி தன்னைச் சூழ்ந்த மகளிர் கூட்டம் புகழத் தன் விடுதியை அடைந்து, அரசன் தனது பாட்டினைப் புகழ்ந்த தனையே ஒரு பெரும் புகழ்ச்சியாக நினைந்து பெரு மிதம் மிக்கு, அளவற்ற உவகையிற் றிளைத்திருந்தனள். பத்திரன் மனைவியாகிய கற்பின் மிக்க மெல்லியலோ, துன்பங் குடிகொண்ட நெஞ்சினையுடையளாய், அங்

கயற் கண்ணி பங்கரும் குணங்குறிகளைக் கடந்து நின்ற பேரொளியுமாகிய சோமசுந்தரப் பெருமானின் திருவடிக்கீழ் அடைந்து, வாட்டமுற்றுக் கலங்கியழுங் கண்ணீரை யுடையளாய், ஒருபால் ஒதுங்கி நின்று இதனைக் கூறுவாளாயினள்: 'தென்னவனாகி நில வுலகைப் புரந்தருளிய மன்னவனே! இராசராச பாண்டியனோ வாரம்பற்றி வழக்குரைப்பானாயினன்; அவன் கருத்தினுக் கிசைய அவையோரும் அத் தன்மையராயினர்; இங்ஙனமாயபின், ஐயனே! ஒரு பாற் கோடாத நடுநிலைமையுடன் ஆய்ந்துரைப்பார் எவருளர்? நினது திருவருளாகிய துணையை நல்கி எனது இன்னல்நோயைத் தீர்த்தருள்வாயாக' என்று குறையிரந்தனள். அப்பொழுது அன்பு வலைப்படுவோ னாகிய ஆண்டவன் திருவருளால், 'நீயே நாளை வெல்லு மாறு செய்வோம் அஞ்சற்க' என வானொலி எழ, அதுகேட்ட மடவரல், மனக்கவற்சி நீங்கி மனையகம் புக்கனள். அரசன் மறுநாளும் அவ்விறலிய ரிருவரை யும் அழைப்பித்து, அவர் தம் பாடல்களைக் கேட்டு, முன்னாளிற் கூறியவண்ணமே மொழிந்தனன்; அவை யிலுள்ளோரும் அவ்வாறே கூறினர். இதனைக் கேட்டு உளம் புழுங்கி நின்ற பாடினி, பாண்டி மன்னனை நோக்கி, 'தென்னருள் ஏறனையாய்! நிலவுல கில் அறந்திறம்பாது செங்கோலோச்சும் மன்னவரிற் சிறந்தோயாகிய நீ விருப்பின் வழியே வழக்குரைப் பாயாயினை; அரசன் எவ்வழி குடிகள் அவ்வழி என்றாங்கு, நீ நடுநிலை இகந்து கூறியவாறே நின் அவையத்தினருங் கூறத் துணிந்தனர்; ஆகலின், துலை

நாவன்ன நடுநிலையுடைய சொக்கேசர் திருக்கோயி லின்முன் சென்று பாடுவேம்; அங்ஙனம் பாடுங்கால், எம்மிருவர் பாடலையுங் கேட்போருள் யாரேனும் ஒரு வர்,மனந்துணிந்து இறைவன் திருமுன்னே இருவருள் இவள்தான் வென்றனள் என்று கூறின் அமையும்' என மொழிந்தனள். அரசனும் அங்ஙனமே ஆகுக என இசைய, மாதர் இருவரும் தத்தம் இருப்பிடம் எய்தினர்.

## இறைவனருளால் இசை வாது வென்றமை.

மற்றை ஞான்று மன்னவன், அமைச்சரும், இசை நூலும் பிறவும் வல்ல ஏனையோரும் சூழ்வரச் சென்று, வெள்ளியம்பலவாணர் திருமுன்புள்ள மண்டபத்தையடைந்து, ஏவலரை விடுத்துப் பாடல் நங்கையரிருவரையும் அழைப்பித்தனன். கலத்தின் வந்த விறலி, இன்று தவவேட முடைய இப்பாடினி எனக்கு அடிமையாவாள் என்று கருதி, நெறி பிறழ்ந்த மனத்தின்கட் செருக்கொடும் விரைந்து போந்தாள். திருமகள் போலும் அழகுடைய பத்திரன் மனைவி, கல்வியறிவான் மேம்பட்டெழுந்த நிறையும், அறிவுப் பேரொளியாகிய சொக்கலிங்கப் பெருமானின் திரு வடிமேல் வைத்த அன்பும் பொலிந்து தோன்ற, அன்னமன்ன மென்னடையுடன் வந்தனள். அப் பொழுது, ஆடக மதுரைக்கு அரசாய் மேவிய பெரு மானும், ஆரம் தோள்வளை முதலிய அணிகளுடன் நாவலர் போலப் புலவர் குழாத்தினிடையில் வந்து தங்கினர். மெல்லியலார் இருவருள் வேற்று நாட்டுப்

பாடினி முதலில் வேத்திசை பாடினள்; முன்னர் அவளிசையைப் பாராட்டினோர் மனம் விரும்பி யாதுங் கூறுதிருந்தனர். பாணர் மனைவியும், வாணி வீணையேந்திப் பாடும் இருக்கையில் அமர்ந்து, யாழ் நரம்பினை விரலாற்றுக்கி இன்னிசை எழுப்பிப் பாடு வாளாயினள் :

"குடங்கை நீரும் பச்சிலையும் இடுவார்க் கிமையாக் குஞ்சரமும்
படங்கொள் பாயும் பூவணையும் தருவாய் மதுரைப் பரமேட்டி
படங்கொள் பாயும் பூவணையும் தருவாய் கையிற் படுதலைகொண்டு
இடங்கள் தோறும் இரப்பாயென் றேசு வார்க்கென் பேசுவனே"

"தேனூர் மொழியார் விழிவழியே செல்லா தவர்க்கே வீடென்று
நானு வேதப் பொருளுரைத்தாய் நீயே மதுரை நம்பரனே
நானு வேதப் பொருளுரைத்தாய் நீயே பாதி நாரியுரு
ஆனு யென்று பிறர்பழித்தால் அடியேன் விடையே தறைவேனே"

"வாத ஞகி யெவ்வுயிர்க்கும் மாயா விருத்தி வலியடக்கிச்
சாத மான வீட்டின்பம் தருவாய் மதுரைத் தனிமுதலே
சாத மான வீட்டின்பம் தருவாய் வீடு பெறுவார்போல்
விரத யோக நிலையடைந்தாய் என்பார்க் கென்ஞன் விளம்புவனே"

கண்ணுதற்பிரானை இங்ஙனங் கருதிய இசைப்பாட்டினால் மனங்கனிந்து, பண்ணுதல், பரிவட்டணை முதலாகிய முதற்றெழில் எட்டும், வார்தல், வடித்தல் முதலிய இசைக்கரணம் எட்டும் பொருந்த, யாழினும், தனது நாவினும் எழுந்த இசையமுதத்தை மண்ணவர் செவிகட்கு மாத்திரமோ? வானவர் செவிக்கும் வாக்கினுள். மிடறுவீங்கல் முதலிய உடற்றொழிற் குற்ற

மாதி ஒன்றும் இன்றிச் செவ்விதிற் பாடிய இன்னிசை கேட்டும், கன்னி நாடுடைய காவலன், தான் இசை நூலறிஞனு யிருந்தும், முன்போலவே மொழிதற்கு மனந்துணிகின்றவன், முழுமுதற்பெருமான் திருவரு ளாலே தனது மனக்கோட்டத்தின் வலிகெட, நடுவு நிலையோடு பார்த்து, இவளே வென்றனள் என்றனன். அங்ஙனமே அனைவரும் மொழிந்தனர். ஒரு பாகத் துறையும் உமையினை மறைத்து வந்திருந்த அரிய புலவராகிய சோமசுந்தரக்கடவுள், ஈது அற்புதம்! ஈது அற்புதம்!! என்று கூறியருளி, அவையின்கண் உள் ளோர் யாவரும் காண மின்போல் மறைந்தனர். அது கண்ட அனைவரும் வியப்புற்றனர்; அரசன் அச்ச மெய்தினன். எல்லோரும் இது கூடற்பெருமானது திருவிளையாடல் எனத் தெளிந்து, சிவபெருமானது திருவருளின் திறத்தையும், அடியாரின் ஒப்பற்ற அன்பையும் சீர்தூக்கி, தமது கண்களினின்றும் நிறைந்த நீர் அருவியாகப் பெருக, இன்பமாகிய ஒப் பற்ற பெருங்கடலுள் மூழ்கினர். மன்னவன், வெற்றி யெய்திய பத்திரன் மனைவிக்கு முத்துமாலையும், நவ மணிக்கலன்களும், பொற்பட்டாடையும் வரிசையாக அளித்து, தோல்வியுற்ற பாடினிக்கும் அவள் உளம் மகிழுமாறு சில வரிசைகளை ஈந்து, அவையின்கட் போந்து அனைவருடனும் சிறப்ப வீற்றிருந்தருளி விண்ணிழி கோயிலுட் புக்கிருந்த பெரும் புலவராய சோமசுந்தரக் கடவுளுக்கும் அருங்கலன் முதலியன அளித்து, அரசர்தம் வலிகள் எல்லாம் தெய்வத்தின் வலிமுன் னில்லா, அத் தெய்வங்களின் வலியனைத்

னும் முப்புரமெரித்த முதல்வன் வலிமுன் னில்லா, என்று பலரும் கூறுவதெல்லாம், இந்தப் பாடினியின் வாயிலாகக் காணப்பட்டதென்று வியப்புற்றவனாய், சொக்கலிங்கப் பெருமானை வலஞ்செய்து பணிந்து, தன் கோயிலை அடைந்திருந்தான். பாணபத்திரனார் இத்தகு சிறப்புடைய தம் பழுதில் கற்புடைப் பாடினி யாருடன், பன்னெடுங்காலம் அண்ணலாரருளால் இனிது வாழ்ந்திருந்து, முடிவிலே இமையவர் போற்ற வும், யாவருங்காணவும் ஒளியுடை விமானத்தேறிச் சிவனுலகடைவா ராயினார்.



# ஆராய்ச்சிக் குறிப்பு.

## இரு திருவிளையாடற் புராணங்களின் வேறுபாடு.

பாண பத்திரர் வரலாறு பெரும்பற்றப்புலியூர் நம்பி இயற்றிய திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணத்தின் சாதாரி பாடின திருவிளையாடல், திருமுகங் கொடுத்த திருவிளையாடல், பலகையிட்ட திருவிளையாடல், இசைவாது வென்ற திருவிளையாடல் என்னும் நான்கு பகுதியினும், பரஞ்சோதி முனிவர் இயற்றிய திருவிளையாடற் புராணத்தின் விறகு விற்ற படலம், திருமுகங் கொடுத்த படலம், பலகையிட்ட படலம், இசைவாது வென்ற படலம் என்னும் நான்கு பகுதியினும் உரைக்கப்பெற்றுளது. முதற் பகுதிக்குப் பாட்டினை முதன்மையாகக் கொண்டு ஒருவரும், விறகு விற்றமையை முதன்மையாகக் கொண்டு ஒருவரும் பெயர் வைத்துள்ளனர். இரண்டிலும் முன் மூன்று பகுதியும் பத்திரனுர் வரலாற்றையும், நான்காம் பகுதி அவர் மனைவியாரது வரலாற்றையும் உரைப்பன என்னலாம். திருமுகங் கொடுத்த வரலாறு திருத்தொண்டர் புராணத்திலுள்ள கழறிற்றறிவார் நாயனுர் புராணத்திலும் கூறப்பெற்றுள்ளது. நம்பி திருவிளையாடற் புராணத்தில் இந் நான்கும் முறையே 54-வது முதலாக அமைந்துள்ளன. திருஞானசம்பந்தரால் நிகழப்பெற்ற இரண்டு திருவிளை

யாடல்கள் இந்நூலில் 37, 38 ஆகவும், மாணிக்க வாசகரால் நிகழப்பெற்ற நான்கு திருவிளையாடல்கள் 27, 28, 29, 30 ஆகவும் உள்ளன. பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற் புராணத்தில் பாணர் பொருட்டு நிகழ்ந்த நான்கும் 41-வது முதலாக அமைந்துள்ளன. இந்நூலில் வாதவூரடிகள் காரண மாக நிகழ்ந்த நான்கும் 58, 59, 60, 61 ஆகவும், ஆளுடைய பிள்ளையாரால் நிகழ்ந்த இரண்டும் 62, 63 ஆகவும் உள்ளன.

## பாணபத்திரர் காலம்.

எனவே, இரு நூல்களும் திருவிளையாடல்களை அவை நிகழ்ந்த கால அடைவில் முறைப்படுத்தின எனக் கொள்ளின், முன்னதன்படி பாணபத்திரர் மணிவாசகர்க்கும், சம்பந்தர்க்கும் பிற்காலத்தில் இருந் தனராவர் என்பதும், பின்னதன்படி இருவர்க்கும் முற்காலத்தில் இருந்தனராவர் என்பதும் பெறப் படும். இரு நூல்களும் வாதவூரரைக் காழியர் கோனுக்கு முன் வைத்துள்ளன.

நம்பி திருவிளையாடற் புராணம் முன்னர்த் தோன்றியதாகலின் அதனைப் பின்பற்றியே **திருவிளை யாடற் பயகரமாலை** என்னும் நூலும், **கடம்பவன புராணத்**திலுள்ள இலீலாசங்கிரக வத்தியாயமும் திருவிளையாடல்களை முறைப்படுத்திக் கூறுகின்றன. எனினும், அவையெல்லாம் கால முறையில் அமைந் தன வென்றல் பொருந்தாது. நம்பியார் பாண்டியர்

களில் மலயத்துவசன் முதலிய எழுவர் பெயரையே குறிப்பிட்டுள்ளார்; யுகத்திற்குப் பதினாறு ஆக நான்கு யுகத்திற்கும் அறுபத்து நான்கு திருவிளையாடல்கள் நிகழ்ந்தன என்கின்றார்; அவர், 27-வது முதலிய நான்கு திருவிளையாடல்கட்குக் காரணராயிருந்த மாணிக்க வாசகர், திருவாசகத்திற் சுட்டியுள்ள மெய்க்காட்டிட்டது, அட்டமா சித்தி பகர்ந்தது, தண்ணீர்ப் பந்தர் வைத்தது, புலிமுலை புல்வாய்க்கருளினது, பன்றிக் குட்டிகளுக்கு அருள் புரிந்தது, கரிக் குருவிக்கு அருள் புரிந்தது என்பவற்றை முறையே 39, 42, 43, 53, 59, 60 ஆம் திருவிளையாடல்களாக அமைத்துள்ளார். இவ்வாற்றால், அவரது நூல் கால ஆராய்ச்சிக்குச் சிறிதும் பயன்படுவதின்றாம். பரஞ்சோதி முனிவர் திருவாசகத்திற் சுட்டப்பெற்ற திருவிளையாடல்களை யெல்லாம் முன்னர் வைத்திருத்தலானும், பாண்டியர்களின் வழிமுறையை விடாது கூறிச் செல்லுதலானும், இவரது நூல், வரலாற்றாராய்ச்சிக்கு முன்னதினும் வலியுடையதாகும். எனினும், வேறு சான்றுகட்கு மாறில்லாத வழியே இந்நூலால் காலத்தின் முற்பிற்பாடு துணியத்தகும். பல திருவிளையாடல்களைத் திருவாசகத்தில் எடுத்தோதிய **திருவாதவூரடிகள்**, பாணபத்திரர் பொருட்டு இறைவன் எளிவந்து அருளிய அற்புதமான நிகழ்ச்சி யொன்றையும் குறியாமையால், பத்திரர் அடிகட்குச் சிறிது பிற்காலத்தினராவர் எனக் கருதுதல் பொருந்தும். **பெரும்பற்றப்புலியூர் நம்பி** பாணபத்திரர் செய்தியைப் பின் வைத்திருப்பது முற்கூறிய ஏதுவா

னும், வரலாற்றுராய்ச்சியிற் சிறந்தவரும், திருவருட் பேறுடையவருமாகிய சேக்கிழார் பெருமான் கருத்தோ டொத்திருத்தலானும் கொள்ளத்தக்கதாகும். ஆனால், நம்பி திருவிளையாடற்புராணத்தைப் பலவகை ஆராய்ச் சிகளுடன் பதிப்பித்துள்ள டாக்டர் வே. சாமிநாதைய ரவர்கள், 'திருவிளையாடற் கதைகள் வந்துள்ள பழைய தமிழ் நூல்கள்' என்ற தலைப்பில், "தார முய்த்தது பாணற் கருளொடே" "பாணனிசை பத்திமையாற் பாடுதலும் பரிந்தளித்தான்" என்னும் திருஞான சம் பந்தர் திருவாக்குகள் திருமுகங் கொடுத்த திருவிளை யாடலைக் குறிப்பிடுவனவாக எழுதியுள்ளார்கள். உயர்திரு. மறைமலை யடிகளும் இக்கருத்தின ரென்பது முன்னரே காட்டப்பெற்றது. இதனை மேலும் ஆராய்ந்து துணிதல் அறிஞர் கடனாகும்.

## புராணங்களின் ஒற்றுமை.

திருவிளையாடற் புராணம் இரண்டனுள், பரஞ் சோதி முனிவர் இயற்றியது மிக்க விரிவுடையதும், பெருமித நடையும், சொற்பொருள் நயங்களும் வாய்ந் ததும், பத்திநலங் கனிந்து கற்பார்க்குப் பெரும் பயன் விளைப்பதும், சைவ நன் மக்கள் யாவரானும் பெரிய புராணத்தை யடுத்துப் பாராட்டிப் பயிலப்பெறுவ தும் ஆகலின், அதனைத் தழுவியே இவ் வுரைநடை நூலிற் பாணபத்திரர் வரலாறு எழுதப்பெற்றது. எனினும், இப்பகுதியில் நம்பி கூறிச்செல்வதற்கும் இதற்கும் கதைப்போக்கில் மாறுபாடில்லை. சோழ னது நாட்டினின்றும் போந்த ஓர் பாணன் என நம்பி

கூறியது, இதில், வடநாட்டினின்றும் போந்த ஏமநாதன் என்னும் பாணன் எனக் கூறப்பெற்றுளது. பாண்டியற்குப் பாணபத்திரர் மனைவிபால் மாறுபாடு தோன்றினமைக்கு இரண்டிலும் வேறு வேறு காரணம் கூறப்பெற்றுளது. இச் சிறு வேற்றுமைகளே உள்ளன. திருத்தொண்டர் புராணத்துள்ள, திருமுகங்கொடுத்த வரலாறும் இவற்றுடன் சிறிதும் வேறுபட்டிலது. பெரிய புராணத்திலுள்ள,

> "அடியேன் பொருளாத் திருமுகங்கொண் டணைந்த தென்ன
> வவர் தாமும்
> கொடிசேர் விடையார் திருமுகங்கைக் கொடுத்து வணங்கக்
> கொற்றவனார்
> முடிமேற் கொண்டு கூத்தாடி மொழியுங் குழறிப்
> பொழிகண்ணீர்
> பொடியார் மார்பிற் பரந்துவிழப் புவிமேற் பலகால்
> வீழ்ந்தெழுந்தார்."

என்பது முதலிய செய்யுட்கள் நெஞ்சையுருக்கும் நீர்மையன.

இறைவனளித்த "மதிமலிபுரிசை" என்னும் திருமுகப் பாசுரம், திருவருட்பாக்களின் தொகுதியாகிய சைவத் திருமுறைகளுள்ளே பதினொன்றாந் திருமுறையின் முதற்பாட்டாக அமைந்துளது.

### சாதாரிப் பண்.

இறைவன் விறகு சுமந்து வந்து இசை பாடியது,

'வடபுற விஞ்சையன் வைகிடத் தகன்கடைத்
தென்றிசைப் பாணன் அடிமை யானெனப்
போகா விறகுடன் றலைக்கடை பொருந்தி
.........................................சாதாரி
உலகுயி ருள்ளமும் ஒன்றுபட் டொடுங்க
இசைவிதி பாடி யிசைப்பகை துரந்த
கூடற் கிறையோன்." (44)

எனவும், திருமுகங்கொடுத்தது,

"குடக்கோச் சேரன் கிடைத்திது காண்கென
மதிமலி புரிசைத் திருமுகங் கூறி
அன்புருத் தரித்த இன்பிசைப் பாணன்
பெறநிதி கொடுக்கென உறவிடுத் தருளிய
மாதவர் வழுத்துங் கூடற் கிறைவன்." (45)

எனவும் கல்லாடத்தில் வந்துள்ளன.

இறைவன் பாணபத்திரர் பொருட்டு வட திசைப் பாணன் தலைக்கடையிலிருந்து பாடியது 'சாதாரி' என இரண்டு திருவிளையாடற் புராணத் தும் கூறப்பெற்றுள்ளது. கல்லாடமும் அவ்வாறே கூறுகின்றது. சாதாரி என்பது நால்வகைப் பெரும் பண்களுள் ஒன்றாகிய செவ்வழி (முல்லை) யாழின் புற நிலையாகிய திறம் என அறியப்படுகின்றது. இது வட மொழியில் தேவகாந்தாரி யென்று கூறப்படும் என்பர்.

## குறிப்புரை.

பக்கம்.

9. ஆயர் முதலிய ஐவரும் முறையே முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல் என்னும் நிலங்கட்கு உரியராவர்.

பழையர் — நெய்தல் நிலத்தவர்; கள் விற்கும் தொழிலுடையோர்.

மூதின் முல்லை — வாகைத் திணையின் துறைகளில் ஒன்று; முதுகுடிப் பிறந்த மகளிரின் மறமிகுதியை உரைப்பது.

10. கடிப்பு — முரசடிக்கும் குறுந்தடி.
இகூஉம் — அறையும்.
கடம் — கடன்; கடமை.
தரீஇ — தந்து; தருவித்து.
திருநாள் — அரசர் பிறந்த நாள்.
படைநாள் — படையெழுச்சி நாள்.
கடிநாள் — மணநாள்.

11. நூற்பா — சூத்திரம்.
விறல் — சத்துவம்; மெய்மயிர் சிலிர்த்தல், கண்ணீர் வார்தல் முதலியன.

ஆற்றுப்படை — வழிப்படுத்தல்; ஒரு தலைவன்பாற் பரிசில் பெற்று வரும் கூத்தர் முதலாயினார், வறுமையால் மெலிந்து எதிரே

பக்கம் வரும் கூத்தர் முதலாயினோர்க்கு அத்தலைவனது வண்மை முதலியவற்றைச் சொல்லி அவனிடத்து ஆற்றுப்படுப்பது. இது பாடாண்டிணையின் துறைகளுள் ஒன்று.

12. பாரசவர் — கலப்பு மணத்தாற் பிறந்த ஒரு வகையினர்.

பாரதிவிருத்தி — சிவன், திருமால், முருகன், காமன், கொற்றவை, இலக்குமி, அயிராணி என்போர் ஆடிய பதினோராடல்கள்.

எண்வகைச் சுவை — வீரம், அச்சம், இழிப்பு, வியப்பு, காமம், அவலம், வெகுளி, நகை என்பன.

பாடினி — பாண் மகள்.

இளையர் — ஏவல் செய்வோர்.

13. புரி — முறுக்கு.
இடவயின் — இடப்பக்கத்தில்.
நைவளம் — நட்டபாடை யென்னும் பண்.
பழுநிய — முற்றுப்பெற்ற.
முறையுளி — முறையால்.

14. பெய்ம்மார் — பெய்ய; இட.
உரீஇ — உருவி.
கூலம் — தானியம்.
சுவல் — தோள்.
கோள்வல் — கொள்ளுதலில் வல்ல.

கொடுவாய் — வளைந்தவாய்.
இரும்பு — தூண்டில் முள்.
புலம்ப — தனிமையுற.
போழ்வாய் — பிளந்த வாய்.

15. யாணர் — புது வருவாய்.
கெடிறு — ஒருவகை மீன்.
வட்டி — மீன் கூடை.
வை — கூர்மை.

16. நாளோலக்கம் — காலை அத்தாணி; Durbar.

17. வாயில் — தூது.
பழுமரம் — பழுத்த மரம்.
கொடிஞ்சி—தேரின் முன்றட்டிலே தாமரை மொட்டுப்போற் செய்து நிறுத்தப்பட்டிருக்கும் ஓர் உறுப்பு.

18. வேர் — வியர்வு.
சிதாஅர் — கந்தை.
உயவல் — வருத்தம்.
கலித்த — செருக்கிய.
அதர் — வழி.
முதாஅரி — முதுமை.

19. இறுக்கும் — செலுத்தும்.
முற்றுக — சூழ்க.

ஓம்பாது — பாதுகாவாது.
பூவை — நாகணவாய்ப் பறவை.

20. மிடறு — கண்டம்.
நறை — தேன்போலும் இசை.
அசுணம் — ஒருவகை விலங்கு.
காழ் — குத்துக்கோல்.
ஒருத்தல் — விலங்கின் ஆண்.
அருளின்மாறு — வன்கண்மை.
தலைபெயர்க்கும் — போக்கும்.

22. உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள் — இடையிடையே உரைச் செய்யுளும், இசைப் பாட்டும் கலந்த காப்பியம்.

24. சித்திரப்படம் — சித்திரவேலை அமைந்த துணி; போர்வை.
கோடு — யாழ்த் தண்டு.
கொங்குவேள் — பெருங்கதையின் ஆசிரியர்.
திருத்தக்கதேவர் – சீவகசிந்தாமணியின் ஆசிரியர்.

25. பெரும்பாணர் — திருநீலகண்டயாழ்ப்பாணர்
முத்தமிழ் விரகர் — திருஞானசம்பந்தர்.

26. திவவு — வார்க்கட்டு.

பக்கம்

32. நினை—நினைவு.
சண்பை—சீகாழி.
மூவர்—சேர சோழ பாண்டியர்.
பொழில் வரைப்பு—நிலவெல்லை.

33. செய்யாட்கு—இலக்குமிக்கு.
வலித்து—இறுகப் பிணித்து.
தேவபாணி—கடவுளைப் பாடும் பாட்டு'

34. திப்பியம்—திவ்யம்; தூய்மை.

35. தோணிபுரம்—சீகாழி.
பாலறுவாயர்—சம்பந்தர்.

36. கின்னரப்புள்—ஒருவகைப் பறவை.

37. துன்னிய—நெருங்கிய.
அணுக்கர்—அணிமையில் இருப்பவர்.
அப்பரிசினை—அத்தன்மையை.

39. உய்திபெறுதல்—கடைத்தேறுதல்.
ஞானபோனகர்—ஞானமாகிய உணவை உண்டவர்; சம்பந்தர்.

40. வீக்கிய—இறுகப் பிணித்த.

41. நம்பர்—சிவபிரான்.

பக்கம்

திருக்கடைக்காப்பு—பதிக இறுதியில் அதன் பயன் கூறும் பாட்டு.

தந்திரி—நரம்பு.

42. பணை—வயல்.

விஞ்சிய—மிக்க.

வெங்குரு—சீகாழி.

முத்தீ—காருகபத்தியம், ஆகவனீயம், தென்றிசையங்கி என்பன.

வேதி—மேடை.

43. பன்னி—பத்தினி.

44. சங்கம பத்தி—அடியார் பத்தி.

45. மறைமொழி—மந்திரம்.

கொடிமாடச் செங்குன்றூர் — திருச்செங்கோடு.

46. சூளாமணி—உச்சியில் தரிக்கும் மணி.

47. திருவியமகம்—சம்பந்தர் பாடிய ஓர் பதிகம்; யமகம்—மடக்கு என்னும் சொல்லணி.

48. வாதாபி—சளுக்கியருடைய தலை நகர்.

51. தொண்டர் சீர் பரவுவார்—சேக்கிழார்.

தகர்த்து—உடைத்து.

வல்லி—கொடிபோன்ற பெண்.

பக்கம்

53. உதரபந்தம்—வயிற்றிலே கட்டுங் கச்சை.
கோள்—கிரகம்.
சென்னி வேந்தன்—சோழ வேந்தன்.
முறஞ்செவி வாரணம் — முறம் போலுங் காதினையுடைய யானை.
புறஞ்சிறை வாரணம்—உடம்பிலே சிறகை யுடைய கோழி.
செம்பியன்—சோழன்.
நீளாதேவி—திருமாலின் சத்திகளில் ஒருவர்.

54. திரு மறு—ஸ்ரீ வத்ஸம் என்னும் மறு.
வைப்பு நிதி—புதையற் பொருள்.

55. திரு இலச்சினை—முத்திரா தாரணம்.

56. பாடரவப் பள்ளி — பெருமை பொருந்திய சேஷசயனம்.

57. சூளுறவு—சபதம்.
ஊர்தி—வாகனம்.
புரந்தரன்—தேவேந்திரன்.

58. உற்பாதம்—பின்வரும் தீங்கினை அறிவிக்கும் குறி.
மந்திரச் சுற்றம்—மந்திரிமார்.
அருளப்பாடு—கட்டளை.
கடுக—விரைய.

பக்கம்

59. பெரிய திருவடி—கருடாழ்வார்.

61. படிமை—விக்கிரகம்.
அமலன், விமலன், நிமலன், நின்மலன் என்பன மலம் (அழுக்கு) அற்றவன் என்னும் பொருளன.

62. இரண்டறக் கலத்தல்—பேதமறக் கலத்தல் ; அத்துவிதமாதல்.

63. குருகேசன்—சடகோபர்.

64. அன்பர் தாட்டூளி—தொண்டரடிப்பொடி.

65. அறுதியிட—நிச்சயிக்க.
முரணி—மாறுபட்டு.

66. ஆத்தியர்—அன்புடையவர்.

68. கோயில்—சிதம்பரம்.
பொருவிடை—பாயும் இடபம்.
புலிஅதளன்—புலித்தோலே உடுத்தவன்.
சரணும் பதுமம்—திருவடியாகிய தாமரை.
தார் இயலும்—மாலையாகப் பொருந்தும்.
கடல் இடம்—கடல் சூழ்ந்த பூமி.

70. அரியணை—சிங்காதனம்.
திறம்பாமல்—மாறுபடாமல்.

பகலவன் — சூரியன்.

71. வரிசை — சிறப்பு.

உழையர் — ஏவலாளர்.

72. ஆவணம் — கடை வீதி.

கவர் வழி — இரண்டு தெருக்களாகப் பிரியும் வழி.

குழகன் — சுந்தரன்.

74. பார்ப்பு — குஞ்சு.

சேக்கை — கூடு.

முயற்கறை — சந்திரனிடத்துள்ள களங்கம்.

சிவந்த மங்குல் — செவ்வானம்.

கொண்கன் — கணவன்.

பொருப்பன் மங்கை — மலையரையன் புதல்வி; பார்வதி.

76. மாடகம் — யாழிலுள்ள முறுக்காணி.

இறால் — தேன் கூடு.

77. புரை — குற்றம்.

நீல வண்ணன் — திருமால்.

கால் — வாய்க்கால்.

விஞ்சையர் — வித்தியாதரர்.

பக்கம்

78. போதுளான் — தாமரைப் பூவில் இருக்கும் பிரமன்.
வேலைமீதுளான்—பாற்கடலிற் பள்ளிகொள்ளும் திருமால்.

79. இந்தனம் — விறகு.

80. ஈர்க்க — இழுக்க.

81. உண்மை யறிவானந்தம் — சச்சிதானந்தம்; சத்து, சித்து, ஆனந்தம்.
தெறும்படி — வருத்தும்படி.

82. நெருநல் — முன்னாள்.
நென்னல் — நெருநல்.

84. கருவூலம் — பொக்கிஷம்.

85. போந்தைக் கண்ணியோன் — பனைமாலையை உடையவன்;
போந்தை — பனை.

86. புரிசை — மதில்.
கொண்மூ — மேகம்.
குரு — நிறம்.
செரு மா — போர்செய்யும் குதிரை.
உகைக்கும் — செலுத்தும்.

பக்கம்

87. கொற்றவை — துர்க்காதேவி.
திருவஞ்சைக்களம் — திரு அஞ்சைக்களம்; வஞ்சிநகரிலே சிவபிரான் கோயில் கொண்டிருக்கும் இடம்.
உழையர் — ஒற்றர்.

88. பொடிப்பு — புளகம்; மயிர் சிலிர்த்தல்.
முடங்கல் — ஓலை.

89. வாச்சியம் — வாத்தியம்.
தீம்பூ — வாசனைப் பொருள்களுள் ஒன்று.
முகவாசம் — வாயிலிட்டுக்கொள்ளும் தக்கோலம், தீம்பூ, இலவங்கம், கருப்பூரம், சாதி என்னும் ஐவகை வாசனைப் பொருள்கள்.

90. உதியர் — சேரர்.
அளகை வேந்தன் — குபேரன்.
வரிசையால் — தகுதிக்கேற்ப.

92. பைங்கூழ் — பயிர்.
கையறவு — வேட்கையாலாகிய மயக்கம்.

93. இருவர் — அசுவதரர், கம்பளர் என்பவர்கள்.
தூங்குதல் — செறிதல்.

94. விம்மிதம் — அதிசயம்.

95. இகல் — பகை.

பக்கம்

97. விடையிறுத்து — விடைகூறி.
பாடுதி — பாடுவாய்.
பூசல் — போராட்டம்.

98. வாக்கினுள் — வார்த்தாள்.
உட்கிடை — கருத்து.

99. வாரம்பற்றி — பக்ஷபாதமாய்.
இகந்து — கடந்து.

101. வேத்திசை — அரசரைப்பாடும் பாட்டு.
குடங்கை — அகங்கை.
நாறு — பல.
வரதன் — கொடுப்பவன்.

102. கோட்டம் — கோணல்.

104. கழறிற்றறிவார் — சேரமான்பெருமாள் நாயனார்.

105. ஆளுடைய பிள்ளையார் — சம்பந்தர்.
வாதவூரர் — மாணிக்கவாசகர்.
காழியர்கோன் — சம்பந்தர்.

106. வழிமுறை — சந்ததி.
வரலாறு — சரித்திரம்

3084



பக்கம்

*108.* கொடிசேர் விடையார் — இடபக்கொடியை உடையவர்.

பொடிஆர் மார்பு-திருநீறு நிறைந்த மார்பு.

நீர்மையன — தன்மையை உடையன.

*109.* விஞ்சையன்—(இசை) வித்தையில் வல்லவன்.

குடக்கோ — மேற்றிசைக் காவலன்.

கிடைத்து — அடுத்து.